

# கம்பன் மலர்

கம்பன் கழகம், கோவை

1980

# கம்பன் மலர்

## 1980

"கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம்"

**1980 பிப்ரவரி 9, 10 தேதிகளில்**
**நிகழ்ந்த**
**8-ஆம் ஆண்டு கம்பன் விழா வெளியீடு**

*"கம்பநாடன் கவிதையிற்போல் கற்றோர்க்கு இதயம் களியாதே"*


**கம்பன் கழகம்**

மணி பீடர் பள்ளி, பாப்பநாயக்கன்பாளையம், கோயமுத்தூர்-641 037

# கம்பன் கழகம் - கோவை

| | |
|---|---|
| தலைவர் | : திரு. ஜி. கே. சுந்தரம் |
| துணைத்தலைவர்கள் : | ,, க. கு. கோதண்டராமன் |
| | ,, டி. கே. பி. வரதராசன் |
| | ,, நா. வரதராஜுலு நாயுடு |
| பொருளர் | : ,, என். சின்னசாமி நாயுடு |
| செயலர் | : புலவர் அ. ம. பாலசுப்ரமணியம் |
| இணைச் செயலர் | : புலவர் க. மீ. வேங்கடேசன் |
| செயற் குழுவினர் | : பேராசிரியர் திரு. ம. ரா. போ. குருசாமி |
| | ,, ,, ஆர். இருசுப்பிள்ளை |
| | ,, ,, க. வெள்ளிமலை |
| | ,, இ. வெங்கடேசலு நாயுடு |
| | ,, பி. ஏகாம்பரம் |
| | ,, நா. நஞ்சுண்டன் |
| | ,, பி. வி. பத்மநாபன் |
| | ,, மு. ஆறுமுகம் |
| | ,, ஏ. கே. சீதாபதி |
| | பேராசிரியை திருமதி சிவானந்தவல்லி இராசமாணிக்கம் |
| | ,, ,, தரணிபாஸ்கர் |

---

மலர் பொறுப்பாளர் : திரு. நா. நஞ்சுண்டன்

உதவி : திரு. க. மீ. வேங்கடேசன்

## உள்ளுறை

# தோரண வாயில்...

காசு இல் கொற்றத்து இராமன் கதையினை, ஆசைபற்றி அறைய லுற்றவன் கம்பன். இராம காதையே, தர்மத்தை – அறத்தை, வையத்துள் மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்து காட்டும் நெறியினை, மனிதப் பண்பை விளக்கும் காவியமாகும். மூலகாவியத்தின் கர்த்தாவான வான்மீகி முனிவன், நாரதமுனிவரை நோக்கி, மிக்க குணவானும், தர்மத்தில் சிறந்தவனும், வீரனும், சகல லட்சணங்களும் பொருந்தியவனும், உத்தமனுகவும் இருக்கும் ஒருவன் சரித்திரத்தை எழுத ஆவல் கொண்டு, அவன் யார்? என்று கேட்ட பொழுது அவர், இராமனே என்று கூறியதைக்கொண்டு, இராமாயணம் எழுதினர் என்பது புராண வரலாறு.

ஆகவேதான், கம்பன் தன் காலத்திலே எத்தனையோ புராணக் கதைகள் இருந்தும்கூட, "வாங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகியின்" இராமாயணத்தைத் தேர்ந்து எடுத்து தெள்ளு தமிழில் எழுதிச் செவிக் கின்பம் சேர்த்தான். இன்று உலகின் பல்வேறு மொழிகளிலே, இரஷ்ய, சீன மொழிகள் உட்பட இராமாயணக் கதை மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது என்ருல் உண்மையிலே அதன் கதை வளம் மட்டுமல்லாமல், அதனூடே பொதிந்து கிடக்கும், மனிதவாழ்க்கை நெறிமுறைகளும், அறப்பண்புகளும்தான் மொழி பெயர்ப்பாளர்களை ஈர்த்திருக்க வேண்டும். இல்லையென்ருல் இராமகாதை இத்துணை மொழிகளிலே வெளிவந்திருக்குமா?

> "நாரதன் கருப்பஞ்சாரராய், நல்லவான்மீகன் பாகாய்,
> சீர்அணி போதன்வட்டாய், செய்தனன்; காளிதாசன்
> பார்அமுது அருந்தப் பஞ்சதாரையாய்ச் செய்தான்; கம்பன்,
> வாரம்ஆம் இராமகாதை வளம்முறை திருத்திஞனே."

என்ற இராமாயணத் தனியன் இவற்றின் சிறப்பை நன்கு பறைசாற்றுகிறது.

இன்றைக்குச் சரியாக 1095 ஆண்டுகளுக்குமுன் எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல், பண்ணிய இராமகாதை பங்குனி அத்தநாளில், (கி.பி. 886, பிப்ருவரி, 23) கண்ணிய அரங்கர் முன்னே கவி அரங்கேற்றி, கவிச்சக்ரவர்த்தி என்னும் சிறப்பையும் பெற்ருன் கம்பன்.

கம்பன் காவியத்திலே தோய்ந்து, தோய்ந்து இன்புற்றவர்கள் அநேகர்; அவனது செவிநுகர்க் கனிகளை மடுத்தவர் பலர்; அவர்களிலே நம்மிடையே வாழ்ந்து, மறைந்த தமிழ்ப் பெரியார்கள் பலர் உண்டு. குறிப்பாக முதுபெரும் புலவர் மு. இராகவ அய்யங்கார், ரசிகமணி டி. கே. சி. வெள்ளக்கால் வெ. ப. சுப்பிரமணிய முதலியார் போன்ருேர்கள் கம்பனின் இலக்கிய நயத்தை, கவிதையின் வளத்தை தங்களது எழுத்தாற்றல் மூலம் வெளிப் படுத்தியுள்ளார்கள். கால்நூற்ருண்டுக்கு முன்னல் வெளிவந்த அவர்களது எழுத்துச் செல்வத்தை இன்றைய இளம் தலைமுறையினர் படித்தும், அனுபவித்தும் இன்புற்று கம்பனின் கவி நயத்தைப் புரிந்து கொள்ளவேண்டும் என்ற ஆசையில், ரசிகமணி டி. கே.சி., மு. இராகவையங்கார் ஆகியோரின் அருமையான கட்டுரைகளை, முன்பு பல ஏடுகளில்

எழுதியுள்ளதை மீண்டும் பிரசுரம் செய்திருக்கிறோம். இன்றைய நிலையில் அப்பெரியோர்கள் எவ்வளவு அழகாகக்கம்பனை அனுபவித்து இருக்கிறார்கள் என்பதைப் படித்துப் பார்த்தாலே விளங்கும்.

இன்று நம்மிடையே இருக்கும் அறிஞர் பெருமக்களில், பிறமொழிக் காப்பியங்களோடு கம்பனின் காப்பியத்தை ஒப்பு நோக்கி, ஆராய்ச்சி செய்து, கம்பனே சிறந்தவன் என்பதை மற்றவர்களும் ஏற்றுக்கொள்ளக் கூடிய வகையில், தங்கள் ஆராய்ச்சியைத் தொடர்பவர்கள் திரு. என். வி. நாயுடு, டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன் ஆகியோர் ஆவர் அவர்களது கட்டுரைகள் மலரில் இடம் பெற்றுள்ளன. மற்றும் திருவாளர்கள் இராம ராசன், கிருஷ்ணசாமி, க. கி. இராமசாமி ஆகியோர் எழுத்தோவியங்களும் மலருக்கு மெருகூட்டுகின்றன.

கடைசியாக ஒன்றைச் சொல்வதிலே மிக்கப்பெருமை அடைகிறேன். கடந்த பதினைந்து ஆண்டுகளுக்கு மேலாக கம்பனைப் பல மேடைகளிலே கண்டும், கேட்டும் இன்புற்றுத் தோய்ந்து திளைத்தவர், எங்கள் தலைவர் திரு. ஜி. கே. சுந்தரம் அவர்கள். அரசியலிலே காந்தியடிகளால் ஈர்க்கப் பட்டு, இராஜாஜியின் வழியிலே நின்று நெறிப்பட்டவரான அவர், இராமா யணக்காவியத்தில் வெகுவாக விருப்பம் கொண்டு ஈடுபட்டது முறையான தேயாகும். முன்னையோர் வகுத்த நெறியில் நின்று, அதனைச் செம்மையாகச் செய்து முடிக்கும் திறன்படைத்த அவர்கள், இம் மலரில் கட்டுரை ஒன்று எழுதியுள்ளார்கள். தொழில் சம்பந்தமான நிறைந்த பணிகளுக்கு இடை யிலேயும் கூட கம்பன் காவியத்தை எத்தனை நுணுக்கமாக அவர்கள் படித்து, இன்புற்று, ஆழ்ந்து அனுபவித்து இருக்கிறார்கள் என்பதை, அவர்கள் எழுதிய கட்டுரையே நமக்குப் புலப்படுத்துகிறது.

ஆக, உங்கள் கரங்களில் இடம்பெற்றிருக்கும் "**கம்பன் மலர்**" எங்களின் இரண்டாவது மலர். மணக்க மறுக்கும் மலராக அல்லாமல், மணம் வீசும் மலராக இது அமைந்திருக்கிறது. அம் மணம் உங்களுக்கும் தெரிகிற தல்லவா? இம் மலரில் மணக்கும் கட்டுரைகளை எழுதியுதவிய அனைவருக் கும் கம்பன் கழகத்தின் சார்பில் நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம். மலரில் தங்கள் நிறுவனங்களின் விளம்பரத்தைக் கொடுத்துதவிய பெருமக் களுக்கும், உடனிருந்து, உற்சாகப்படுத்தி, ஊக்குவித்த பொருளாளர் திரு. என். சின்னசாமி நாயுடு அவர்களுக்கும் சிறப்புற உரியகாலத்தில் மலரை அச்சிட்டு அளித்த, 'கலைமகள்' இராம. இராமநாதன் அவர்களுக்கும், துணை யாக இருந்து, ஒத்துழைத்த இணைச் செயலர் திரு. க. மீ. வேங்கடேசன் அவர்களுக்கும் எங்கள் உளமார்ந்த நன்றியை தெரிவித்துக்கொள்கிறோம்.

கம்பன் புகழ்பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்போம்.

அன்பும் பணிவுமுள்ள,

கோவை,
9—2—80.

**நா. நஞ்சுண்டன்**
*மலர்ப் பொறுப்பாளர்*

உ

# கம்பர் திருப்பள்ளி எழுச்சி

சிரவை ஆதீன வித்துவான் மதுரகவி
**கு. கி. இராமசாமி** பி. ஏ.

பூவிரிந் தொழுகின புதுமது வெள்ளம்;
 பொங்கொளி பாந்தது கீழ்த்திசை எங்கும்;
மேவிய மாதவிப் பந்தர்கள் தோறும்
 மெல்லிசைப் பூங்குயில் கூவின கேளாய்;
காவியப் புலவர்க்கு முடிமணி ஆனுய்;
 கல்வியிற் பெரியவன் கம்பர் பிரானென் (று)
ஏவரும் இசைத்திடும் இசைபெரி துடையாய்;
 எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே (1)

பொறிமயிர் வாரணம் திசைதிசை கூவப்
 புள்ளினம் ஆர்த்தன; ஆர்த்தன சங்கம்;
நறுமலர் தொறும்வந்து முரசின வண்டு;
 நான்மறை ஓதினர் அந்தணர் காணுய்;
நிறைகுணத் தண்ணல் இராகவன் கீர்த்தி
 நெடுந்தமிழ் அமுதொடு குழைத்தினி தூட்டும்
இறைமணங் கமழ்கவிக் கம்பனென் றேதும்
 எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே (2)

ஆயிரம் பொற்கதிர்ப் பரிதியஞ் செல்வன்
 அணிரதச் சாரதி உதித்தனன் கிழக்கில்;
போயகன் றதுசெறி இருட்பெரும் படலம்;
 பொய்கையில் தாமரைப் பூமுகம் மலர்ந்த;
மாயிருந் தமிழ்க்கொரு கதியென வந்து
 மன்னிய திருவமுந் தூரவ தரித்தாய்;
மேயின வான்புகழ்க் கம்பனென் றேதும்
 வித்தக னேபள்ளி எழுந்தரு ளாயே (3)

கண்டிலம் கேட்டிலம் காவியம் ஒன்று
காசினி மேலிது போற்பிறி தென்று
தண்டமிழ் வாணர்கள் உளங்களி கூரத்
தசரதன் சேய்ராகு ராமனின் காதை
அண்டரும் அமுதினைக் கைவிட்டு வினவ
அணிநலம் சுவைநலம் பாநலந் தோய
எண்டிசை போற்றநன் கியற்றிய கம்பன்
எனும்பெரி யாய்பள்ளி எழுந்தரு ளாயே (4)

சடையப்ப ஞர்புகழ் போலத்தன் புகழும்
தாரணி எங்கணு மேநின்று நிலவ,
கடையப்பண் டொருதிருப் பாற்கடல் தோன்றிக்
கடவுளர் மாந்திய தெள்ளமு தேய்பத்
தடையற்ற தெய்விகக் கவித்திறங் கொண்டு
தசரதன் மதலையின் சரிதையைத் துய்ய
நடைமிக்க தாப்புனை கம்பர் பிரானே!
நம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே (5)



# சொல்ல முடியாதல்லவா போய்விட்டது!

ரசிகமணி **டி. கே. சி.**

நமக்குத் தெரியும் ராம பக்தர் ஒருவர் நாடகத்துக்குப் போன கதை.

நாடக மேடைக்கு முன்னால் பக்தர் உட்கார்ந்திருந்தார்.

ராம நாடகம் நடக்கிறது. தசரதன் கைகேசி சொல்லை மறுக்க மாட்டாமல் ராமனைக் காட்டுக்குப் போகச் சொல்கிறான். ராமனும் தாவாப் பண்ணாமல் காட்டுக் குப்போக இணங்கிவிடுகிறான்.

நாடக மேடைக்கு எதிரில் முன்னணியில் இருந்த பக்தருக்கு இந்த அநீதியைத் தாங்க முடியவில்லை. கோபம் பொங்கிவிட்டது. எழுந்திருந்தார். ஒரு தாவுத் தாவி நாடக மேடைக்குப் போனார். ராமனைப் பார்த்து "நீ நல்லவன். நீ போக வேண்டாம் காட்டுக்கு" என்று ஒதுக்கி நிறுத்திவிட்டு, தசரதனிடம் போய் "நீ சுத்த அயோக்கியன். நீ போ காட்டுக்கு. இந்த கைகேசியையும் கூட்டிக்கொண்டு போ" என்று ஒரே கர்ஜனையாகக் கர்ஜித்து இரண்டு பேரையும் நாடக மேடைக்கு வெளியே தள்ளிவிட்டார். முடிந்தது ராம நாடகம்!

'நாடகம் உருப்படுகிறதாவது ஒன்றாவது இனி' என்று டிக்கெட் வாங்கின வர்கள் எல்லாரும் கொட்டகையைக் காலி செய்து விட்டுத் தங்கள் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

நம்முடைய ராமபக்தர் ரகத்தில்ச் சேர்ந்த ராமாயண ஆசிரியர்களும் ராமா யண காலக்ஷேப பக்த சிகாமணிகளும் எத்தனையோ பேர்.

ஒரு நல்ல பாத்திரமாய் இருந்தால் ஐயோ போகட்டும் என்று சோர்வோ பழுதோ இல்லாமல் திருத்தமாய் அமைத்து விடுவார்கள் பாத்திரத்தை.

'ஜடாயு, அடாடா! எவ்வளவு புனிதமானவன். ராமனிடத்தில் எவ்வளவு வாஞ்சை! அப்பேர்பட்ட ஜடாயுவையா சோர்வு பட அமைப்பது? கூடவே கூடாது' என்று எண்ணி ஒரு யுக்தி பண்ணினார்கள்.

ராவணனால் வெட்டுண்டு மூர்ச்சையாய்க் கிடக்கிறான் ஜடாயு. சீதையை இழந்த ராமலக்ஷ்மணர்கள் ஜடாயுவைக்கொஞ்சம் சௌகர்யம் செய்து கொஞ்சம் அறிவு தெளியச் செய்தார்கள். ராம லக்ஷ்மணர்களைப் பார்த்தவுடனே "நல்லதாய் போயிற்று நீங்கள் இங்கே வந்தது. சீதை காணாமல்ப் போய்விட்டாள். கவலை வேண்டாம். இலங் கைக்கு அதிபதியான அரக்கன் ராவணன்தான் தூக்கிக்கொண்டு போய்விட்டான். என்னையும் இந்தப்பாடு படுத்தி விட்டு" என்று சொல்லி இராவணனுடைய விலாசத் தை வீட்டு நெம்பர், தெருப் பெயர், இன்ன வார்டு, இன்ன பட்டணம் என்று விபரமாக எழுதிக் கொடுத்துவிட்டான். (ஜடாயு சொன்னது எழுதிக் கொடுத்த மாதிரி இருந்தது.)

ஜடாயு மேல்க் குற்றம் இல்லை பார்த்தீர்களா ? லகுவாய்ப் போய்விட்டது காரியம். குரங்குகள் போய் தேடுகிறது. அனுமான் போய் தேடுகிறது. எல்லாம் அனுவசியமாகி வெகு சௌகர்யமாய் முடிகிறது ராமாயணம்.

நம்முடைய மேலே சொன்ன ராமபக்தருக்கு எத்தனை சகாக்கள் பார்த்தீர் களா ? அவர்கள் காரியம் இருக்கட்டும் அப்படி.

* * *

இனி கம்பருக்கு வரலாம். கதையை அவர் எப்படி நடத்துகிறார் பார்க்கலாம்

ராம லக்ஷ்மணர்கள் சீதையை இழந்தவர்களாய்த் துயரத்தில் மனம் மழுங்கித் தள்ளாடித் தள்ளாடி நடந்து வருகிறார்கள். எங்கே தேட ? ஏதோ உணர்வற்ற உருவங்கள் போல் நடந்து வருகிறார்கள்.

வழியில் ஜடாயு உயிர் போன நிலையாய்க் கிடப்பதைக் கண்டார்கள். ஓடிப் போய் அப்படியே ஜடாயுவின் உடலின் மீது விழுந்தார்கள்.

அந்த அதிர்ச்சியில் உயிர் நாடி துடிப்பைக் கண்டார்கள் ஜடாயுவின் உடலில். தண்ணீர் கொண்டு வந்து முகத்தில் விட்டார்கள். கொஞ்சம் உணர்ச்சி வந்தது ஜடாயுவுக்கு. கண்ணைத் திறந்து பார்த்தான். ராம லக்ஷ்மணர்களை இனம் தெரிந்து கொண்டான்.

ஒரே சந்தோஷம் உண்டாய் விட்டது ஜடாயுவுக்கு. சொல்கிறான் : '' இந்த உயிர் போகத்தான் போகிறது. ஆனாலும் உங்களுக்கு உண்மையைச் சொல்லிவிட முடிகிறதல்லவா எனக்கு. என்ன பாக்கியசாலி நான். இரண்டு இறக்கையும் பெற்றேன். ஏழுலகத்தையும் பெற்றேன். பழியைத் தீர்த்தேன் '' என்றெல்லாம் ஆவேசத்தோடு பேசுகிறான்.

மேலும் பேசுகிறான் : '' நானே யூகித்துக் கொண்ட காரியந்தான். உங்களை வஞ்சித்துச் செய்த காரியந்தான், இருக்கட்டும். நீங்கள் இரண்டு பேரும் சீதையை விட்டுப் பிரிந்திருக்க நேர்ந்ததோ ?'' என்று கேட்டான்.

லக்ஷ்மணன், மாயமான் வந்தது முதலான சகல காரியங்களையும் ஒன்று விடாமல் சொல்லி முடித்தான். ஜடாயு மிக்க ஆதரவோடு கேட்டு விஷயத்தை மனசில் வாங்கிக்கொண்டான்.

ஆனாலும் அவனது மனசில் ஒரு பயம் நேர்ந்தது. நடந்த விஷயத்தை அப்படியே திடீர் என்று சொல்லிவிட்டால் துயர் தாங்காமல் ராம லக்ஷ்மணர்களுக்கு மூளை கொதித்து விடுமோ என்று பயந்தான்

ஆற்றலோன் அவ்வுரை அறைய, ஆசையால்
ஏற்றுணர்ந்(து) எண்ணி அவ் எருவை வேந்தனும்,—
மாற்றரும் துயர் அவர் மனக்கொ ளாவகை
தேற்றுதல் நன்றென இனைய செப்புவான்.

[ஆற்றலோன் அவ்வுரை அறைய—பேசுந்திறமை வாய்ந்த அந்த லக்ஷ்மணன் அப்படிச்சொல்ல ஆசையால் ஏற்றுணர்ந்து எண்ணி — மிக்க ஆர்வத்தோடு யோசனை செய்து மனதில் வாங்கி அவ் எருவை வேந்தனும் அந்த ஜடாயுவும் மாற்றரும் துயர் - மாற்ற முடியாத கடும் துயரம் அவர் மனக் கொளா வகை ராம லக்ஷ்மணர்களது மனசில் ஏறிவிடாத படி, மனசு சிதைந்து போகாதபடி தேற்றுதல் நன்றென— மெள்ளத் தேற்றுதல் நல்லது என்று இனைய செப்புவான்— பின் வருவன வற்றை சொல்லுகிறான் ]

"அற்புதம் எதையாவது ஒருவன் இந்த உலகத்தில் செய்து விடமுடியுமா, முடியாது. நம்முடைய பிறவியில் இன்ப துன்பங்கள் எத்தனையோ வந்து சேருகின்றன. அந்த இன்ப துன்பங்கள் எல்லாம் விதி ஏற்படுத்தியதே ஒழிய வேறு யாரும் செய்தது அல்ல என்பது உண்மை. இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்வது நமது கடமை.

'அதிசயம் ஒருவரால் அமைக்க லாகுமோ ?
துதிஅறு பிறவியின் இன்ப துன்பந்தான்
விதிவயம் என்பதை, மேற்கொ ளல்கடன்,—
மதியினுல் விதிஅதை வெல்ல வல்லமோ.'"

[அதிசயம்— காரண காரிய நியதிப்படி சகல காரியங்களும் நடக்க. அதை மீறிச் செய்வதாகச் சொல்லும் அற்புதச் செயல். துதி அறு பிறவியின்— பாராட்டுக்கு உரியது அல்லாத இந்தப் பிறவியின். மேற்கொளல் கடன்— மனசில்ப் பதிய வைத்தல் கடன் மதியினுல் விதி அதை வெல்ல வல்லமோ— எவ்வளவு யோசனையிலிருந்தாலும் விதியை வெல்ல முடியுமா நமக்கு; முடியாது]

தான் கண்ட காட்சியை, அதாவது சீதையை ராவணன் தூக்கிக் கொண்டு போன காட்சியை, ராமனிடம் சொல்ல ஜடாயுவுக்கு மனம் துணிய வில்லை; யாருக்குத் தான் துணிவு வரும்? உள்ளம் ரொம்பத் தயங்குகிறது. எப்படியோ மனசைத் திடப் படுத்திக் கொண்டு ஒரு சாய்வான போக்கில்ப் பேசுகிருன் ஜடாயு. "சீதையைப் பிரிதற்கான காரணம் தெரிகிறது எனக்கு. தர்மம் சிதைவுண்டு போய்விட்டது; தேவர்கள் துயரத்திற்கு உள்ளாகி விட்டார்கள்; பின்னே என்ன? அந்த தர்மமும் தேவர்களது துயரமும் சேர்ந்துதான் இந்த துன்பத்தை விளைத்திருக்கின்றன.

சரி, அரக்கர்களை உலகத்தை விட்டுக் களைய வேண்டியதுதான். அதன் பிறகு நல்லவாழ்வு ஏற்படும்."

பிள்ளைச்சொல்க் கிளிஅன்னு ளைப் பிரிவுறல் உற்றபெற் றி
தள்ளுற்ற அறமும்தே வர் துயரமும் தந்ததே யால்,—
கள்ளப்போர் அரக்கர்என் னும் களையினைக் களைந்துவாழ் தி !
புள்ளிற்கும் புலனில்பேய்க் கும் தாயன்ன புலவுவே லோய் !

பிள்ளைச் சொல்க் கிளி அன்னுளை— குழந்தை போலும் சொல்லுடைய கிளி போலும் சீதையை. பிரிவுறல் உற்ற பெற்றி— பிரியும்படி நேர்ந்ததே காரியம் தள்ளுற்ற அறமும்— புறக்கணிக்கப்பட்ட தர்மமும். தேவர் துயரமும்— தேவர் படுகின்ற துன்பமும் சேர்ந்து தந்ததேயால்— செய்த காரியந்தான்.

கள்ளப் போர் அரக்கர் என்னும்— கள்ளத் தனமாகவே போர் செய்து வந்திருக்கிற அரக்கர் என்னும். களையினைக் களைந்து வாழ்தி— உலகத்துக்குக் களையாயிருக்கிற அவர்களைக் களைந்து வாழ்வாயாக புள்ளிற்கும் புலனில் பேய்க்கும்— போர்க் களத்தில் வந்து மொய்க்கும் பருந்து கழுகு முதலிய பறவைகளுக்கும் பகுத்தறிவில்லா பேய்களுக்கும் தாயன்ன புலவுவேல்— தாய் ஊட்டுவது போல் உணவளிக்கும் வேலாயுதம். வேலோய்— அத்தகைய வேலைக் கையில் ஏந்திய வீரனே.]

மேலே சொன்ன மாதிரி, திக்கித் திக்கி விஷயத்தை சொன்னன் ஜடாயு. ஒரு அரக்கன் தான் சீதையை எடுத்துக்கொண்டு போய் விட்டான் என்றும், ஜடாயுவின் சிறகை அறுத்தவன் அந்த அரக்கனே என்றும் சொல்லவில்லை. ஆனுலும் ராமன் அனுமானித்துக்கொண்டான். கோபம் அப்படியே மூண்டுவிட்டது. குமுறுகிருன்.

"பெண்தனி ஒருத்திதன் னைப் பேதைவாள் அரக்கன்பற் றிக்
கொண்டனன் ஏக,நீ இக் கோளுறக், குலுங்கல்செய் யா
எண்திசை இறுதியா ன உலகங்கள் இவற்றைஇன் னே
கண்டவா னவர்களோ டும் களையுமா(று) இன்றுகாண் டி"

[பெண் தனி ஒருத்தி தன்னை— தனியாக இருக்க நேர்ந்த ஒரு பெண்ணை. பேதை வாள் அரக்கன்—மிக்க கீழானவனுன வாள் ஏந்திய யாரோ ஒரு அரக்கன். பற்றிக்கொண்டனன் ஏக— எடுத்துக் கொண்டு போக. நீ இக் கோள் உற— நீயும் இந்த மரணவஸ்தைக்கு உள்ளாக. குலுங்கல் செய்யா, எண் திசை இறுதியான— குலுங்கி நொறுங்கிப் போயிருக்க வேண்டும்; அப்படிப் போகாத எட்டுத் திசையும் முட்டியுள்ள. உலகங்கள் இவற்றை இதோ தெரிகிற உலகங்களை. இன்னே இந்த க்ஷணமே. கண்ட வானவர்களோடும்— இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருக்கிறுர்களே தேவர்கள் அவர்களையும் சேர்த்து களையுமாறு இன்று காண்டி— இதோ களைந்து விடுகிறேன் பார்! இராமனுடைய பேச்சு எல்லாம் ஜன்னிக் கோளாறுதான்.]

பார்த்தான் ஜடாயு; அடடா, இந்த ராமனுக்குக் கோபவெறி எப்படி உண்டாகி விட்டது! மூளை கொதித்து விட்டதே! இதை எப்படித் தணிப்பது? என்று திகைத்தவனுய் அப்படியே இருந்து விட்டான். சிறிது நேரங் கழித்து ஒரு யோசனை தென்பட்டு பேச ஆரம்பிக்கின்றுன் :

"உலகத்தி லுள்ளவர்களையோ, தேவர்களையோ யாரையோ குற்றம் சொல்ல என்ன இருக்கிறது? நம்மைத்தான் நொந்து கொள்ள வேண்டும்.

'வம்பிழை கொங்கைவஞ் சி வனத்திடைத் தமியள்வை கக்,
கொம்பிழை மானின்பின் போய்க் குலப்பழி கூட்டிக்கொண் டீர்!
அம்பிழை வரிவில்ச்செங் கை ஐயன்மீர்! ஆயுங்கா லை
உம்பிழை என்பதல் லால், உலகஞ்செய் பிழையுமுண் டோ?'"

[வம்பிழை கொங்கை வஞ்சி— வார் அணிந்த கொங்கையோடு கூடிய பூங்கொடி போன்ற சீதை வனத்திடைத் தமியள் வைக வனத்தில் தனியாக இருக்க கொம்பிழை மானின் பின் போய் அழகாகக் கொம்பைச் சீவி அமைந்த மானின் பின் போய் குலப்பழி கூட்டிக் கொண்டீர்— உங்கள் குலத்திற்கே பழியை உண்டாக்கிக் கொண்டீர்கள், நீங்கள் இருவருமேதான் அம்பு இழை வரிவில்ச் செங்கை ஐயன்மீர்— அம்பு தொடுக்கும் வில் ஏந்திய வீரர்களே, அரச குமாரர்களே ஆயுங் காலை— கொஞ்சம் ஆராய்ந்து பார்த்தால். உம்பிழை என்பது அல்லால்— நீங்கள் செய்த பிழை என்று தானே ஆகும், அப்படிக் கல்லாமல் உலகத்தார் பிழை செய்தார்கள் என்று ஏற்படுமா?

குறிப்பு :- ராமனுடைய கோப வெறியைத் தீர்ப்பதற்கு வேறுவழியில்லாமல் கடுமையான இந்த வார்த்தைகளை ஜடாயு சிரமப்பட்டு உபயோகிக்கிறுன். இந்த வார்த்தையால் ராமன் மனது புண்படும என்று தெரியும் தெரிந்தாலும், அதுதான் கோப வெறிக்கு மருந்து என்று எண்ணிச் சொல்லுகிறுன், மிக்க துணிவும் தந்திரமும் கலந்துள்ள பாவமிது. வார்த்தையிலுள்ள காரத்தை இதப்படுத்து வதற்காக. ராமன் ஒருவனைப் பார்த்துச் சொல்லாமல் இருவரையும் பார்த்துச் சொல்கிறுன் லக்ஷ்மணனையும் சேர்த்துச் சொன்னது ஒரு நல்ல உபாயம்]

ஜடாயுவின் கடுஞ் சொல் ராமனது இதயத்தில்ப் போய்த் தைத்து விட்டது. அதன் மூலமாகக் கோப வெறி இறங்குகிறது

கோப வெறியைத் தணிப்பதற்காகவே ஜடாயு இவ்வாறு சொன்னுன் என்று ராமனும் தெரிந்து கொண்டான். ஜடாயுவைப் பார்த்து சொல்கிறுன் :

"ஐயனே! உன் அருமை வாயால் கோபங் கொள்ளாதே என்று சொல்கிறுய்; அப்படியே செய்வது அல்லாது எனக்கு மற்றெரு செயல் ஏதாவது இருக்கிறதா?"

இவ்வாறு சொல்லி விட்டு, மெள்ளக் கேட்கிறான் ராமன்; கொஞ்சம் பயந்தே கேட்கிறான்.

**ஆயபின் அமலன்தா னும் 'ஐய! நீ அமைதிஎன் ன**
**வாயிடை மொழிந்ததன் றி மற்றொரு செயலும்உண் டோ!**
**போய(து) அவ் அரக்கன்எங் கே புகல்' எனப்;—புள்ளின்வேந் தன்**
**ஓய்வினன் உணர்வுந்தே ய உரைத்திலன், உயிருந்தீர்ந் தான்**

[ஆயபின்— கோபத்தை விடப்பா என்று ஜடாயு சொல்லவும், அப்படியே ராமனுக்கு கோபம் தணிந்தபின். அமலன் தானும்— ராமனும். ஐய! நீ அமைதி என்ன - ஐயனே, என்னைப் பார்த்து நீ கோபங் கொள்ளாதே என்று. வாயிடை மொழிந்த தன்றி— வாய் திறந்து சிரமத்தோடு சொன்னதை யல்லாமல் மற்றொரு செயலும் உண்டோ— செய்வதற்கு வேறொரு செயலும் உண்டா

போயது அவ் அரக்கன் எங்கே புகல் என— நீ சொன்ன அரக்கன் எங்கே போனான் என்பதை தயவு செய்து சொல்ல வேண்டும் என்று மெள்ளச் சொன்ன மாத்திரத்தில். என்ன நேர்ந்தது? புள்ளின் வேந்தன் ஓய்வினன் உணர்வும் தேய— ஜடாயு மிக்க அசதியுற்று உணர்வும் கழிந்தவனாய், உரைத்திலன்— பேசமுடியாமல் போய் விட்டது உயிரும் தீர்ந்தான்- உயிருமே போய் விட்டது ]

ராமனைக் கடுமையான வார்த்தை சொல்லிக் கண்டித்த மாதிரி பேச வேண்டும் என்ற சிரமத்தினாலேயே ஜடாயுவுக்கு அசதி ஏற்பட்டது. ஓய்வும் ஏற்பட்டது, உணர்வின்மையும் ஏற்பட்டது, உயிருமே போய் விட்டது.

விஷயத்தை சொல்ல முடியாது போய்விட்டது.

இதிகாசம் வளருகிறது. அற்புதமான உத்தி!

**குறிப்பு:** செருகு கவிப் புலவர்களை நமக்குத் தெரியும். கதை எப்படிப் போனால் என்ன அவர்களுக்கு? ஜடாயுவை எப்படியாவது நல்லவனாக்கிவிட வேண்டும்! அதற்காக பாடல் பாடிச் செருகி விட்டார்கள். பூர்வ ஆசிரியர்கள் என்ன, கம்பர் என்ன, எல்லாருக்கும் பேருதவிதான்.

பழைய பதிப்பில் உள்ள ராமாயணத்தின்படி ஜடாயு உயிர் நீத்த படலம் எழுநூறாவது பாட்டு. ஜடாயு ராமனிடம் சொல்லுவதாகப் பாடல்:

**"வடுக்கண்நேர் கூந்தலா ளை இராவணன் மண்ணினோ டும்**
**எடுத்தனன் நேருவா னை எதிர்த்தெனை தாற்றல்கொண் டு**
**தடுத்தனென் ஆவதெல் லாம்; தவத்(து)அரண் தந்தவா ளால்ப்**
**படுத்தனன்; இங்குவீழ்ந் தேன் இதுஇன்று பட்டதென் றான்."**

பொருளுக்கும் உத்திக்கும் ஏற்றவாறு செய்யுள்ப் பண்பும் அமைந்திருக்கிறது.

நன்றி: **கல்கி தீபாவளி மலர் 1953**



# விபீடணனது அடைக்கல நோக்கம்

பேராசிரியர் **மு. ராகவையங்கார்**

'**ப**டிகொண்ட கீர்த்தி இராமாயணமெனும் பக்தி வெள்ளம்' என்பது முன்னோர் திருவாக்கு. அப்பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடும் இராமாயண வரலாறுகளிலே, 'விபீஷண சரணாகதி' சிறந்ததாகும். வால்மீகி முனிவர் பாடிய இக்கதாபாகம் சமய முறையாலும் நன் மக்களாற் பெரிதும் போற்றப் படுகிறது. இதன் வரலாற்றுச் சுருக்கம் வருமாறு:

அறவோனும் அறிஞனுமான விபீடணன் சீதா பிராட்டி திறத்தில் தன் தமையன் புரிந்து வரும் கொடுமைகளைப் பொறுக்காமல் அவனுக்கு எத்தனையோ நன்மதிகளை எடுத்துரைத்தான். உரைத்தும் அவற்றை இராவணன் பொருட்படுத்தாமலும் தன்னை உதறித்தள்ளியும் போந்ததனால் வெறுப்புற்று, மனைவி மக்களையும் மற்றச் செல்வங்களையும் முற்றத் துறந்தவனாய், அக்கரையிற் பாடி இறங்கிய இராமனிடம் அடைக்கலம் புகுந்தனன். புகுந்த அவனை ஏற்றுக் கொள்வது தகுமா, தகாதா என்ற ஆலோசனை பெருமாள் திருமுன்பு நிகழ்ந்தது. அப்போது, சகோதரத் துரோகியாய் உற்ற சமயத்தில் விட்டு வந்தவனை நம்பி ஏற்பது தகாதென்றே சுக்கிரீவன் முதலியோர் ஒருமுகமாக அபிப்பிராயப்பட்டனர். ஆனால், மாருதி மட்டும் அன்னோர் கருத்துக்கு மாறாக, விபீடணனைப் பற்றி இலங்கையில் தான் நேரில் கண்ட உண்மைகளை வெளியிட்டு, எவ்வகையினும் இவன் ஏற்கத் தக்கவனே என்று கூறினன். இவை யாவும் கேட்டருளிய இராமபிரான் முடிவில் மாருதியின் கொள்கைக்கே இணங்கி விபீடணனைத் தம்பால் அழைப்பித்து இலங்கை யரசுக்குரிய முடியைச் சூட்டித் தன் உற்ற துணைவருள் ஒருவனாகக் கொண்டருளினர் — என்பது.

இவ் வரலாறு பற்றி வால்மீகி முனிவர் கூறிய செய்திகளையே பெரும்பாலும் தழுவிப் பாடினர் கம்பரும். ஆயினும், இராமபிரானது பெருங் கருணைத் திறமும் விபீடணனது இயற்கைப் பெருமைகளும், அபயப் பிரதானத்தின் மேம்பாடும் சிறந்து திகழும்படி, கதா பாகங்களைச் சிறிது வேறுபட அமைத்துக்கொண்டு அவர் கூறிச் செல்லும் அழகு இன்பமூட்டுவதாகும்.

பரமாத்மாவின் அவதாரமே இராமபிரான் என்பதை மறைத்து, ஒப்புயர்வற்ற மானிட இயல்புகளே வெளித் தோற்றும் படி வரலாறு கூறுவது வால்மீகி முனிவர் மேற்கொண்ட முறையாகும். இம்முறையையும் மீறி அத் தெய்வ நிலை வெளிப்பட்ட இடங்களும் உண்டு. இதனை அறிந்தே கம்பர் இராமபிரானது உத்தமமானுடத் தன்மைகள் விளங்கும்படி பல்லிடங்களிலும் கூறியதோடு தெய்வத் தன்மை வெளிப்படுதற்குற்ற கதா பாகங்களில் அதனை மறையாமல் பரமான்ம நிலை தெளிவாகத் தோற்றுமாறு பாடியும் செல்வர். மெய்யுணர்ந்த முனிவர்கள், ஞானிகள், சாபம் நீங்கினோர் முதலியவர் கூற்றாகவும், கவிக் கூற்றாகவும் வரும் இடங்களிலே அத் தெய்வ நிலை புலப்படுதலையும் ஏனையோர் கூற்றாகவும் இராம வசனங்களாகவும் வரும் இடங்களில் மானுட இயல்புகள் வெளிப்படுதலையும் கம்பர் வாக்கில் பரக்கக் காணலாம். இவை

யன்றி, தெய்வ மானுடத் தன்மைகள் இரண்டுமே பெருமான் வாக்கில் ஒரு சேர அமையப் பாடிய இடங்களும் உண்டு.

இவ் விபீடண சரணாகதியிலும், மேற்கூறிய முறைகள் அவ்விரு கவிஞர் வாக்கிலும் அமைந்துள்ளன. விபீடணனது அடைக்கல நோக்கம், இலங்கையரசைப் பெறுதலே என்பது வால்மீகத்தால் அறியப்பட்டது. "ராஜ்யகாங்க்ஷீ ச ராக்ஷஸ:" என்று இராமபிரானே வானரத் தலைவர் முன் உரைத்ததாக வால்மீகி முனிவர் பாடியுள்ளமை காண்க. மற்றும் நாக பாசத்தால் இராமன் மயங்கிக் கிடந்த நிலையில் விபீடணன், "என் ராஜ்ய மனோரதம் வீணாயிற்றே!" என்று பிரலாபித்த செய்தி வால்மீகத்தால் தெரியவருகின்றது.★ இவற்றுக்கெல்லாம் உட்கருத்து வேறாகக் கூறுவராயினும் மானுட இயல்புகளே இவ்விடங்களில் மேலாடி உள்ளன என்று கொள்ளத் தகும்.

இனிக் கம்பரோ, தெய்வம் மானுடம் என்ற இருநிலைகளும் புலப்பட வைத்து இவ்வரலாற்றைப் பாடுகின்றார். விபீடணன் ஒரு பெரிய தத்துவ ஞானி என்பதும், இராமாவதார உண்மையை உள்ளபடி உணர்ந்தவன் என்பதுமே கம்பர் கொண்ட கருத்து. இராவணனுக்கு எவ்வளவோ நன்மதிகளைக் கூறி, அவனிலும் பெரிய இரணியன் அவதார மூர்த்தியால் அழிவுற்றதை விளக்கியும் அவற்றை யெல்லாம் அவன் பொருட்படுத்தாமல் 'விழி யெதிர் நிற்றியேல் விளிதி' என்று தன்னைக் கடிந்தொதுக்கினன். ஒதுக்கிய பின்பு இலங்கையை விட்டு வெளியேறிய வீடணன் தன்னுடன் வந்த அமைச்சரை நோக்கி,

"ஆதியம் பரமனுக் கன்பும் நல்லற
நீதியின் வழாமையும் உயிர்க்கு நேயமும்
வேதியன் அருளும்நான் விரும்பிப் பெற்றனன்
போதுறு கிழவனைத் தவமுன் பூண்டநாள்"

"ஆயது பயப்பதோர் அமைதி ஆயது"

என்று தன் இயல்புகளைக் கூறியதனாலும், தனக்கு அடைக்கலம் தந்தருளிய இராமபிரானை அவன் அணுகும் நிலையில்,

"எல்லையில் பெருங்குணத் திராமன் தாளிணை
புல்லுதும் புல்லியிப் பிறவி போக்குதும்"

"என்புறக் குளிரும்நெஞ் சுருகு மேலிவன்
புன்புலப் பிறவியின் பகைஞன் போலுமால்"

"அழிந்தது பிறவி யென்னும் அகத்தியல் முகத்திற் காட்ட
..... ...... ......... ...மண்ணின் மார்புற வணங்கி னானை"

என்று உருகியவாற்றாலும், தன் தமையன் கும்பகர்ணனை அணுகி, இராமபிரானிடம் அடைக்கலம் புகும்படி அவனை வேண்டி நின்றபோது,

"இருளுறு சிந்தை யேற்கும் இன்னருள் சுரந்த வீரன்
அருளும்நீ சேரின் ஒன்றோ அவயமும் அளிக்கும் அன்றி
மருளுறு பிறவி நோய்க்கு மருந்துமாம் மாறிச் செல்லும்
உருளுறு சகட வாழ்க்கை ஒழித்துவீ டளிக்கு மன்றோ"

---

★ "ஜீவன் நத்ய விபந்நோஸ்மி
நஷ்டராஜ்ய மனோரத:
ப்ராப்த பிரதிஜ்ஞச்ச ரிபு:
ஸகாமோ ராவண: க்ருத:" —[யுத் காண். ஸர். 50. சு. 20]

என்று சரணுகதியின் உத்தம பலனை உரைத்தவாற்றுலும், பிறவியறுத்து வீடு பேறெய்தலே அவனது பெருநோக்கமன்றி வேறு எதுவுமில்லை என்பது மிகத்தெளிவாகும்.

> " மூவர்க்கும் முதல்வ ராய மூர்த்தியார் அறத்தை முற்றுங்
> காவற்குப் புகுந்து நின்ருர் காகுத்த வேடங்காட்டி "

என்று தெள்ளத் தெளிந்த விபீடணனுக்கு, தன் அண்ணனது நிலையற்ற அரசைப் பெறும் இழிந்த சிந்தை இருந்ததென்று கருதவும் கூடுமோ ?

விபீடணனது உயரிய இந்த நோக்கத்தைக் கம்பர் அழகுற வெளியிட்ட வேறிடங்களும் உண்டு. தம்பாற் சரண் புகுந்த அவனை நோக்கி இராமபிரான், " தாழ் கடல் இலங்கைச்செல்வம் நின்னதே தந்தேன் " என்று கூறி இலங்கையரசுக்குரிய மகுடத்தைச் சூட்டும்படி தம் இளவலுக்கு ஆணையிட்டபோது,

> " விளைவினை அறியும் மேன்மை விபீடணன், என்றும் வீயா
> அளவறு பெருமைச் செல்வம் அளித்தனை யாயின், ஐய !
> களவியல் அரக்கன் பின்னே தோன்றிய கடன்மை தீர
> இளையவற் கவித்த மோலி என்னையும் கவித்தி "

என்று அப்பெருமானை நோக்கி வீடணன் கூறியதாகக் கம்பர் பாடுகிருர். இக் கதைக் கூறு, வான்மீகத்துக் காணப்படாததாகும். இதனுல், இம்மைப் பயனை விரும்பாது, பரத நம்பியைப்போல, ' ராமப் பிராப்தி ' ஒன்றையே கருதிச் சரண் புகுந்தவன் வீடணன் என்பது பெறப்படும். ' காகாசுரனுக்குப் பலம் பிராணம்... ஸ்ரீ விபீடணுழ் வானுக்கு பலம் ராம ப்ராப்தி ' என்று ஸ்ரீ லோகாசாரியார் அருளிய ஸ்ரீ வசன பூஷணமும் இக்கருத்தையே வெளியிடுதல் காண்க.

விபீடணனது இவ்வுள்ளக் கிடையை உள்ளபடி அறிந்த வானர வீரன் மாருதி ஒருவனே எனலாம். மந்திராலோசனையில் ஏனை வானரத் தலைவரின் கருத்துக்கு மாருக அவன்,

> " வாலிவிண் பெறஅர சிளைய வன்பெறக்
> கோலிய வரிசிலை வலியும் கொற்றமும்
> சீலமும் ஓர்ந்துநிற் றேர்ந்து தெள்ளிதின்
> மேலர செய்துவான் விரும்பி யெய்தினுன் "

என்று பெருமான் திருமுன்பு கூறினுன். " வாலிக்கும் அவன் தம்பிக்கும் முறையே வீட்டரசையும்* இம்மையரசையும் வழங்கிய வள்ளலை இன்னுன் " என்று தேர்ந்தான்; தேர்ந்து தெளிந்தான்; அந்தத் தெளிவால், " மேலரசை விரும்பி இப்போது சரண் புகுந்தனன் " என்பது இப்பாடற் கருத்து. இங்கே, ' மேலரசு ' என்று மாருதி கருதியது, வீட்டரசேயன்றி வெற்றரசன்று என்பது தெளிவு. இதனுலன்ருே, அனுமான் கூறியவற்றையெல்லாம் கேட்டு மகிழ்ந்த பெருமான்,

> " மற்றினி உரைப்ப தென்னே மாருதி வடித்துச் சொன்ன
> பெற்றியே பெற்றி "

என்று முடிவு கூறலாயினர். இம் முடிவுரையில், கருத்துற நோக்கிப் போந்த காலமும் நன்று காதல், அருத்தியும் அரசின் மேறறே அறிவினுக் கவதியில்லை, பெருத்துயர்

---

* வாலிக்கு இராமபிரான் வீட்டையருளியவர் என்று வால்மீகியும் கம்பரும் கூறினர்; " ராம பாணுகதா : க்ஷிப்ரமாவஹத் பரமாங்கதிம் " என்ற வால்மீகி வசனமும், ' வெற்றரசெம்பியெய்தி வீட்டர சனக்கு விட்டான் ' என்ற கம்பர் வாக்கும் அறியத்தக்கன.

தவத்தினுலும் பிழைப்பிலன் என்னும் பெற்றி, திருத்திய தாகு மன்றே நம்வயிற் சேர்ந்த செய்கை '' என்பது, இராம வாக்கியமாகக் கம்பர் பாடுகின்ருர். ''(வானரத் தலைவரான) நீங்கள் கூறியபடி, அகாலத்தில் வீடணன் நம்பால் வந்தவனல்லன்; அவனது உள்ளார்ந்த விருப்பமும் அரசின் மேலதே; பெருகிய ஞானம் படைத்தவன் அவன்; செய்தவத்தாலும் குறைவில்லாதவன்; இவற்ருல் ஏற்கத் தக்கவனே '' என்பது இப்பாடற் கருத்து. இதனுள்,

'' காதல் அருத்தியும் அரசின் மேற்றே ''

என்ற தொடர், மேலெழ நோக்குமிடத்து, இலங்கையரசுப் பேறே வீடணன் விரும்பியது என்ற கருத்தில் அமைந்திருத்தல் தெரியலாம். ஆயின் முற்கூறிய வீடு பெறு நோக்கத்துக்கு இக்கருத்து முரண்பட்டுள்ளதே எனின், கூறுவேன்.

இராமபிரானது அவதார உண்மையை வானர வீரர் எல்லாருமே அறிந்தவர் அல்லர். அவ்வாறே, வீடணனது ஞான சீலாதிகளும் அன்னோர் அறியாதவை. இவ்விரண்டும் தெரிந்தவர்களாயின், வீடணனை வரவேற்க அவர்கள் மறுத்திருக்கவும் கூடுமோ? ஆகவே, இராமபிரான், அவர்தம் கருத்தையே தழுவி, '' இலங்கையரசே வீடணன் விரும்பியதாயினும், சுக்ரீவனைப் போலவே அவனையும் நாம் ஏற்றல் தகும் '' என்ற திருவுள்ளத்தோடு இங்ஙனம் கூறலாயினர் - என்பர் அறிஞர். இக் கருத்து ஏற்கத் தக்கதாயினும் சர்வலோக சரணியனுன பெருமான் திருவாக்கினின்று வந்த இவ்வசனத்தைக் கொண்டு, வீடணனது சரணுகதி நோக்கம் வெற்றரசையே பற்றியதென்று நல்லறிஞர் கொள்ளவும், அதனுல் அபயப் பிரதானத்தின் பலன் தாழ்மையுறவும் கூடுமே எனின், இங்கேதான் கம்ப சித்திரமொன்று விசித்திரமாகக் காணப்படுகிறது. அதனை நான் அறிந்தவாறு விளக்குவேன். மேலே கூறியபடி,

'' மேலரசு செய்துவான் விரும்பி எய்தினுன் ''

என்பதன்ருே மாருதி வசனம்? அவன் வடித்துச் சொன்ன பெற்றியிலேதான்,

'' காதல் அருத்தியும் அரசின் மேற்றே ''

என்றருளிச் செய்தனர் இராமபிரானும் என்க. எவ்வாருே எனில், இத்தொடர்க்கு ' அருத்தியும் மேலரசினதே ' என்று, சொல்லை மாற்றிப் பொருள் கொள்ளுமிடத்து மேற்கூறிய கருத்தே நன்கமைதல் காணலாம்.

'' மலர்மிசை யேகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார் ''

என்ற திருக்குறளிலே, ' நிலமிசை ' என்பது மிசையான நிலத்தில் (வீட்டுலகில்) என்ற பொருள் பயத்தல் போல, இங்கும், ' மேலான அரசின் கண்ணதே அருத்தியும் ' என்ற பொருள் பயந்து நிற்றல் அறியத்தகும். எனவே, மாருதி கூறிய மேலரசையே இராமபிரானும் கருதியவர் என்பது பெறப்பட்டது. இனி, ' அரசின் மேற்று ' என்ற தொடருக்கு, ' இம்மையரசினும் மேற்பட்டது ' என்று பொருள் கூறுதலும் பொருந்தும். எவ்வகையிலும், வீடணனது காதலருத்தி, வெற்றரசன்றி, '' சிந்தை செல்லாச் சேணெடுந் தூரத் தந்தமி லின்பத் தரசே '' என்பது பெறப்படத் தடையில்லை. இவ்வாறு, உட்பொருள் காணுவிடத்து விபீடணனது சரணுதி நோக்கம் தாழ்மையுறவும், முன்னேடு பின் முரண்படவும் நேரும் என உணர்க.

இங்ஙனமாயின், இலங்கையரசை விபீடணன் ஏற்று முடி சூடிக் கொண்டது பொருந்துமோ எனின், சரணியனிடம் புகலடைந்த அவன், முற்றும் பரதந்திரனாயினனாதலால் கருணாமூர்த்தியின் கட்டளைக்கு இசைந்து அவ்வரசை அவன் ஏற்கலானான் என்பர்.

இவ்வாறாகச் சரணாகதி தருமத்தின் உத்தம இயல்புகளையும், சரணியனது பெருங்கருணைத் திறமும் நன்கு விளங்கவும் சமயவுண்மை தெளிவுறவும் வீடணனது அடைக்கல நோக்கத்தை அழகுறப் பாடிய புலவர் பெருமானை நாம் போற்றுவோமாக.

நன்றி: **கலைமகள், அக். 1949**





# கம்பன் கண்ட ஆட்சிக்கலை

எஸ். இராமகிருஷ்ணன்

மனித குலம் மகோன்னதமாக வாழ்வைப் படைத்துத் துய்க்கும் பொற்காலத்தைக்குறித்துக் கம்பன் கனவு கண்டான். அந்த லட்சியக் கனவே இராமனை ஈன்றெடுத்த கோசலமாக அவனது மனோபாவனையில் வடிவெடுத்தது. எனவே. கம்பன் விரும்பிய ஆட்சிக்கலையைக் கோசலத்தில் காணமுடியும்.

அயோத்தியிலிருந்து அவனிகாத்த தயரதன் அறவேந்தனுவான். அவன் தாயும் சேயும் தவமும் மருந்தும் அறிவும் தானேயாகி மன்னுயிர் ஓம்பினுன் என்று கம்பன் கூறுகிறுன். புனிதத்திலும் உயர்விலும் அன்னையின் அன்பை விஞ்சியது ஒன்றுமில்லை. மக்களின் நலனுக்காக மறுவில்லா மனத்தோடு சர்வபரித்தியாகம் செய்யும் சிறப்புக்குரியவள் தாய். அன்னையைப் போல் அன்பு சொரியும் மன்னனுகத் தயரதன் விளங்கியதாகக் கம்பன் கூறுகிறுன்.

"இம்மை உலகத்து இசையொடும் விளங்கி
மறுமை உலகமும் மறுவின்றி எய்துப
செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்
சிறுவர்ப் பயந்த செம்மலோர்."

[செறுநர்— பகைவர். செயிர்தீர்— குற்றமற்ற]

என்பது அகப்பாட்டு. வையத்தில் வாழ்வாங்கு வாழ்வதற்கும் வானோர்க்கு உயர்ந்த உலகம் புகுவதற்கும், பெற்றவர்க்குப் புத்திரரே உறுதுணையாவார் என்பது நம் முன்னேர்களின் நம்பிக்கை. தாய் தந்தையர்க்குத் தன்னேரில்லாத் தொண்டு புரியும் சேய் போலத் தயரதன் தன் பிரஜைகளுக்குப் பணிபுரிந்தான் என்கிறுன் கம்பன்.

தவத்தின் திறனுக்கு ஒப்புமில்லை, உயர்வுமில்லை என்பது பாரத தேசம் தேர்ந்து கொண்ட முடிவு.

"வேண்டிய வேண்டியாங்கு எய்தலாற் செய்தவம்
ஈண்டு முயலப் படும்"

என்றுர் வள்ளுவப் பேராசான். எல்லாரும் எல்லாப் பெருஞ் செல்வமும் எய்தி மன நிறைவோடு வாழ்வதற்கு வசதி செய்த வேந்தன் என்பதால் தயரதன் தவத்துக்கு நிகராகின்றுன்.

இவ்வுலக வாழ்வில் இன்பமும் துன்பமும் இணைபிரியா இரட்டையாகப் பின்னிப் பிணைந்திருக்கின்றன. புல்லர்களும் கயவர்களும் எண்ணித் துணிந்து இயற்றும் கொடுமைகளால் விளையும் துயரம் பெரிது. ஆனல் கயமை நீங்கிய புதிய சமுதாயத்திலும், நோய், மூப்பு, இறப்பு முதலியவற்றுல் இன்னல் விளைவதைத்தவிர்ப்பது அரிது எனவே, மனிதனின் உளம் உவந்த சிரிப்பிலும் வேதனையின் சாயல் படிந்திருக்கிறது என்று வானம்பாடிப் பாட்டில் ஷெல்லி கூறுகிறுன். இந்த உண்மையைக் கருத்தில் கொண்டால், சால்புள்ளத்தால் சிறந்த கோசல மக்களுக்கும் இடையிடையே துன்பம்

ஏற்பட்டதைப் புரிந்து கொள்ளலாம். அவ்வாறு துன்பம் நேரும் போது அதனைத் துடைப்பதில், நோய் தீர்க்கும் மருந்து எனத் தயரதன் விளங்கியதாகக் கம்பன் கூறுகிறான். மருந்தின் வகை நான்கு என்பார் வள்ளுவர். (குறள் – 950) அவை, " பல பிணிகட்கும் ஏற்றல், சுவை வீரியம் விளைவாற்றல்களால் மேம்படுதல், எளிதில் எய்தப் படுதல், பகுதியோடு பொருந்துதல் " என்று விரிவுரை தருவார் பரிமேலழகர். மருந்துக்கு நிகர் என்றதால், நாட்டு மக்களின் துயர் தீர்ப்பதில் தயரதன் புலப்படுத்திய விரைவும் வேகமும் அவன் கண்ட வெற்றியும் வெள்ளிடை மலையென விளங்கும்.

புத்தகம் பயிலாவிடில் பொலிவும் இல்லை, பயனும் இல்லை. குறுகுறு நடந்தும் சிறுகை நீட்டியும், இட்டும் தொட்டும், அடிசில் தீண்டியும், யாழும் குழலும் பின்னிட மிழற்றியும் ஈன்றோர் அறிவை இன்பத்தால் மயக்கும் மக்களை அடையாதவனைப் போலவே, நூல் படியாதவனும் கேளாதவனும் வெறுமையில் காலம் தள்ளுகிறார்கள் எனலாம். ' வாய் விட்டுச் சிரியாதவனை நம்பாதே ' என்று கார்லைலும், 'இசையின் இனிமையில் ஈடுபடாதவன் சதி செய்யும் வஞ்சகனாவான் ' என்று ஷேக்ஸ்பியரும் மொழிந்ததைப் போல் கற்றோ கேட்டோ வளராதவனையும் கடியலாம். ஆனால் பல கற்றும் கல்லாதவனாக இருப்பதைவிடப் பழியொன்றில்லை. நீரை உறிஞ்சும் கடற்பஞ்சு போலவும், மையை ஒற்றி எடுக்கும் காகிதம் போலவும், படித்தவற்றை நினைவில் பதியவைத்தால் போதாது. அதன் மெய்ப் பொருள் காணுதல் வேண்டும். கசடறக் கற்றவற்றைப் பகுத்துத் தொகுத்து ஒப்பு நோக்கி உண்மையை உணர்வதற்கு அறிவே உதவுகின்றது. இவ்விதம் மனிதனுக்கு வழிகாட்டும் அறிவினைப் போல் மாந்தருக்கு நண்பனாயும் நல்லாசிரியனாயும் தயரதன் திகழ்ந்தான் என்பான் கம்பன். இனிப் பாட்டைப் படிப்போம் —

" தாயொக்கும் அன்பில் தவமொக்கும் நலம்பயப்பில்
சேயொக்கும் முன்னின்று ஒருசெல்கதி உய்க்கும் நீரால்
நோயொக்கும் என்னின் மருந்தொக்கும் நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான். "

தள்ளரும் புகழ் பெற்ற இவ்வள்ளலின் ஆட்சியில், பல வழியாய்க் கவர்பட்டு ஓடவல்ல வெள்ளமும் பறவையும் விலங்கும் வேசியர் உள்ளமும் ஒருவழி ஓடினவென்று இயம்பி, நன்னெறியில் சென்றவரல்லது புன்னெறியில் சென்றவர் எவரும் இல்லை என்பதைக் கம்பன் உணர்த்துவான்.

தனக்கு முன் வாழ்ந்த சான்றோர்களின் அறிவுச் செல்வத்திலிருந்து காலத்தால் மாசுபடாத கருத்துக்களை ஏற்றுக்கொண்டும், காலங்கடந்த உரைகளை மாற்றியும், கம்பன் அரசியலுக்கு இலக்கணம் வகுக்கிறான். தன்னுடலை யாகமேடைத் தூணாகவும் தன்னுயிரை அத்தூணில் கட்டிய பசுவாகவும் கருதித் தன் உடலையும் உயிரையும் குடி நன்மைக்காக அர்ப்பணித்தலே அரசன் பணி என்று பீஷ்மர் கூறுவார். அறத்திற்கு ஆதியாகத் தன் கோலை நினைந்ததும்,

" குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு "

என்பதைக் கருதியும் முறை செய்யும் மன்னவன் " மக்கட்கு இறையென்று வைக்கப் படும் " என்றார் வள்ளுவர். இந்த அறவழி அரசியலைக் கம்பன் ஏற்றுக்கொள்வதுடன் அதற்குப் புது மெருகும் கொடுக்கிறான். அரசனை இறைவன் நிலைக்கு உயர்த்துவதால் சர்வாதிகாரக் கொடுமைக்கு வாய்ப்பு நேரும் என்று அவன் அஞ்சுகிறான்.

" மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம் "

என்ற சங்க காலக் கருத்து மக்களை தாழ்வாகக் கருதும் மமதைக்கு இடம் கொடுக்குமென்று அவன் எண்ணுகிறான். எனவே, சங்க காலக் கருத்தினை நேர்மாறாக மாற்றி, "உயிரெலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்" என்று தயரதனது தன்மையை எடுத்துரைக்கிறான். கோசலத்தில், "காவலின் ஆணையின் தெய்வம்" (ஆட்சியின் ஆக்ஞா தெய்வம்) எனத் திகழ்ந்தவரும், "அயனையே நிகர் தூயமா முனிவன்" என்ற பாராட்டுக்கு உரியவருமான வசிட்ட முனிவர், இராமன் திருமுடி சூட இருந்த நிலையில் இதே கருத்தை எடுத்துரைக்கிறார்.

வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னனுக்கு
ஐய மின்றி அறம்கட வாதுஅருள்
மெய்யில் நின்றபின் வேள்வியும் வேண்டுமோ ?

"மன்னுயிருக்குத் தொண்டு புரியும் உடல் போன்ற மன்னன் அன்பின் முதிர்ச்சியான அருள் என்ற மெய்ந் நிலையில் நின்று அறவழி பிழையாது ஒழுகினால், யாகமும் எதற்கு?" என்று வினவுகிறார் வசிட்ட முனிவர்.

கம்பன் அரசனை அதிகார நிலையிலிருந்து அகற்றித் தொண்டு நிலையில் நிறுத்துவதால்தான், தயரதன் தன் ராஜ்யத்தை 'ஓம்பினான்' என்றும் 'காத்தான்' என்றும் கூறுவதுடன் அமைகிறான். 'ஆண்டான்' எனச் சொல்லவில்லை. மந்திரப் படலத்தில், "ஆண்ட ஆண்டு அறுபதினாயிரம்" என்று வேந்தன் மூப்பினால் வாய் தவறி மொழிந்தாலும், அச் சொல் ஒவ்வாமையை உடனே உணர்ந்து,

"கன்னியர்க்கு அமைவரும் கற்பின் மாநிலம்
தன்னைஇத் தகைதரத் தருமம் கைதர
மன்னுயிர்க்கு உறுவதே செய்து வைகினேன்
என்னுயிர்க்கு உறுவதும் செய்ய எண்ணினேன்"

என்று சொல்லி விடுகிறான். கன்னியர் தம் கற்பினாலேயே தம்மைக் காத்துக் கொள்வதைப் போல் உலகினோரும் தம் தர்மத்தாலேயே தம்மைக் காத்துக்கொண்டனர் என்றும், மன்னுயிர்க்கு என்னால் இயன்ற தொண்டினை மட்டும் ஆற்றினேன் என்றும் கூறிவிடுகிறான் அரசர்க்கரசன்.

பார் காக்கும் வேந்தனுக்கு நாற்படையும் தேவை என்பர். அரசருள் சிறந்தவனாகத் திகழ்வதற்குப் படை வலிமையே முதல் தேவை என்பார் வள்ளுவர். (குறள் 318) ஆனால் தயரதனின் நாற்படைப் பெருமையைக் கம்பன் விரித்துரைக்கவில்லை. அரசர் சிலர் அவனைப் பகைத்துக் கறுவினாலும், அவரவர் தரத்துக்கு ஏற்றவாறு தயரதன் தன் கை வேலைத் தீட்டுவான் என்றும் அந்த ஒலியைக் கேட்ட மாத்திரத்தில் அவர்கள் பணிந்ததால், அவனது சேவடி அணிந்த பொற்கழல் தேயும் என்றும் கம்பன் நகைச்சுவை ததும்ப நவில்வான். (பா. கா. 180) மீண்டும் அயோத்தியா காண்டத்தில், கோசிக முனிவர் மிதிலை மன்னனிடம்,

"துனிஇன்றி உயிர்செல்லச் சுடர்ஆழிப் படைவெய்யோன்
பனிவென்ற படிஎன்னப் பகைவென்று படிகாப்போன்"

[துனி— துன்பம். ஆழிப்படை— சக்கரைப் படை. படி— பூமி]

என்று கூறிக் கதிரவனைக் கண்ட பனி விலகுவது போல், தயரதனைக் கண்டவுடன் அவனது பகை விலகியது என்று கூறுகிறார். 'தனுவன்றித் துணை இல்லான்' என்றே தயரதனைக் குறிப்பிடுகிறார். பார்க்கப்போனால், தயரதனுடைய நால்வகைப் படை

களின் சிறப்பை எழுசிப்படலம் முதலாக உண்டாட்டுப் படலம் ஈருக உள்ள பால காண்டப் படலங்களில்தான் காண்கிறோம். அங்கு அவர்களது செருமுக வீரமா புலனுகிறது? அன்று. அவர்கள் தத்தம் மனைவிமார்களுடன் ஊடிக்கூடும் பீடே அறியக் கிடக்கிறது. ஆக, தயரதனுடைய படைகள் அழகுக்கே இருந்தன என்பதை உய்த்துணரலாம்.

அயோத்தியின் மதில்கள் விண்ணினை இடறும் அளவுக்கு வளர்ந்திருந்தன. தம் நகரின் வனப்பையும் அமராவதியின் எழிலையும் ஒப்பிட்டுப் பார்க்கவே அவை ஓங்கி வளர்ந்திருந்தன என்பான் கம்பன். கம்பனது கோசலத்தில், கற்சுவர்களும் அழகின் தரம் பார்க்கக் கற்றிருந்தன போலும்! ஆனல் அந்த மதில்கள் காவலுக்காக அமைந்தவையன்று. அவை 'நகருக்கு அணி என' இயற்றப்பட்டிருந்தன என்பான் கம்பன். படையைப் போலவே மதிலும் அகழியுங்கூட அணிகளாகவே திகழ்ந்தன என்பது தெளிவு.

அரசுக்குச் சிறப்புத் தருவது அமைச்சு. வேந்தன் வரம்பற்ற தோள்வலி படைத்தவனுகவும் கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றனுகவும் இருந்தாலும்,

"அமைச்சர் சொல்வழி ஆற்றுதல் ஆற்றலே"

என்பது வசிட்ட முனிவர் இராமனுக்கு வழங்கிய அறிவுரை. தயரதனுடைய அமைச்சரைக் குறித்து கம்பன் அயோத்தியா காண்டத்தில் மந்திரப் படலத்தில் பேசுகிறுன்.

நவையற்ற செய்கைக்கு உறுதுணையாய் அமைந்த நல்நெடுந்தவன் என்று கலைக்கோட்டு முனிவரால் பாராட்டப் பெற்ற வசிட்ட முனிவரே தயரதனுடைய தலைமை அமைச்சர் எனலாம். அவர் நீங்கலாக, வேந்தனுக்கு அறுபதினுயிரம் அமைச்சர் இருந்தனரென்று கம்பன் கூறுவான். அறுபதினுயிரம் என்பது குறியீடான எண். 60,000 அல்ல; அதிகம் பேர் என்றே பொருள் தரும். தயரதன் புவிபுரந்தது அறுபதினுயிரம் ஆண்டு; அவனுடைய மனைவியர் அறுபதினுயிரவர்; மிதிலையில் சிவனது சிலையைத் தூக்கிவந்தவர் 'அறுபதினுயிரம் அளவில் ஆற்றலார்' என்ற செய்திகளையும் நோக்கின் இது தேற்றம். அமைச்சர் பலராயினும் அவர்கள் 'உறுதியில் ஒன்று இவர்க்கு உணர்வு' என்று எண்ணத் தக்கவரென்று வான்மீகத்தைப் பின்பற்றிக் கம்பன் மொழிவான். திருக்குறள் மானமுடைமையை அங்கவியலில் சேர்க்காது ஒழிபு இயலிலே பொருத்தியதென்றுலும், கோசல அமைச்சர் வெகுமானிகள் என்று ஆதிகாவியம் சொல்வதைத் தழுவி மானமுடைமைக் குறள் ஒன்றை (குறள் - 969) ஆண்டு, 'மானம் நோக்கின் கவரிமா அனைய நீரார்' (நீரார் — தன்மை உடையவர்) என்று இயம்புவான் கம்பன். ஆன்ற குடிப் பிறப்பு, நூலறிவு, கேள்வி ஞானம், மதிநுட்பம், நல்லொழுக்கம், காலமும் இடமும் ஏற்ற கருவியும் தேர்ந்து செயல் படும் திறன், புகழுக்கு வேண்டும் செய்கை இயற்றும் ஆற்றல், ஊழையும் உப்பக்கம் காணும் திண்மை ஆகியவற்றைப் பொருந்தப் பெற்றவரென்று முன்னேரைத் தழுவித் தயரத அமைச்சருக்குக் கம்பன் இலக்கணம் கூறுவான்.

ஆனல் முன்னவரிடமிருந்து வேறுபட்டும் செல்வான் கம்பன். பீஷ்மரும் சாணக்கியனும் நஞ்சாலும் நெருப்பாலும் சூனியத்தாலும் பகைவரைத் துன்புறுத்தித் தொலைக்கும் தீவினையையும் ஆதரிப்பர். வள்ளுவர் அதனை ஆதரிக்க வில்லையென்றுலும் கரந்திருந்து காரியம் செய்யும் விரகினை ஆதரிக்கின்றுர் (குறள் 663) மேலும், சந்தி, விக்கிரகம் முதலியவற்றுல் எதிரியின் வலியை அழிக்கும் தந்திரத்துக்கும் பீஷ்மரது ஆட்சிக்கலையில் இடம் உண்டு. வள்ளுவரும்,

"பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்லது அமைச்சு" (633)

என்றே கூறிவிடுவார்.

இத்தகைய தீயசெயல்களைத் தனித்தனியே நோக்கின் அறத்துக்கு அயலான வைதாம் என்றாலும் தன்னலம் சிறிதும் கருதாது குடிநலன் கருதிச் செய்வதால், அறம் திறம்பிய குற்றம் அரசனைச் சாராது என்பார் பீஷ்மர். வள்ளுவருக்கும் இவ்வமைதி ஏற்புடைத்தே. பெருநலம் பயக்குமென்று சிறுபிழை இழைத்தல் நீதியே என்று அமைதி காட்டுவது இது. போக்கில் தவிர்க்க முடியாது நேரிடும் பழுதினை, நோக்கின் தூய்மையால் களையலாம் என்ற கொள்கை இன்றைய நடைமுறைக்கும் ஏற்றதே. படு கொலை சூழும் படைக்கலம் இல்லாது பாரிலுள்ள நாடுகள் சகவாழ்வு வாழவேண்டு மென்று தூய மனத்துடன் தொண்டாற்றுவோரும், வஞ்சனைக்காளாகி வீழ்ச்சியுறு வதைத் தவிர்ப்பதற்காகப் படைபலம் திரட்டும் கொள்கையைத் தழுவுகின்றனர் அல்லவா!

ஆனல் குறியின் தன்மையால் நெறியின் புன்மைக்கு அமைதிகாட்டும் வழியில் கம்பன் செல்லவில்லை. கம்பனது மனேபாவனையில் உயிர்த்தெழும் கோசலம் ஒரு லட்சியச் சமுதாயம். என்றே ஒருநாள் மனிதன் நனவாக்க இருக்கும் கனவு அந்தச் சமுதாயத்தில், கள்வர் இன்மையால் பொருள் காவல் இல்லை. கொள்வார் இன்மை யால் கொடுப்பார் இல்லை. இல்லாமையும் கல்லாமையும் பகையும் பூசலும் பொய்யும் சூதும் அழுக்காறும் அவாவும் இல்லாதொழிந்த சமுதாயம் அது. அது புண்ணிய பூமி, போக பூமியும் கூட. எனவே, ஒழுக்கத்தால் உயர்ந்த அறிவுடை மக்கள் ஒன்றுபட்டு வளமார்ந்த வாழ்வினைச் சுவைக்கும் கோசலத்தில், வன்முறைக் கருவிகளையோ புன் னெறிச் சூழ்ச்சிகளையோ பின்பலமாகக் கொண்டு அரசு இயக்கத் தேவையில்லை.

எனவேதான், "உன் கருவூலத்தையும் ஆயுதசாலையையும் வற்றாமல் வைத்துக் கொள்" என்று வான்மீகத்தில் வசிட்டர் இராமனுக்குப் போதித்ததைக் கம்பனுடைய வசிட்டர் மறுக்கிறார்.

"ஆரொ டும்பகை கொள்ளலன் என்றபின்
போரொ டுங்கும் புகழ்ஒடுங் காதுதன்
தாரொ டுங்கல்செய் யாது"

என்று கம்பனுடைய வசிட்டர் இராமனுக்குப் போதிக்கிறார். பகையின்றேல் போரில்லை என்பதோடு அவர் அமையவில்லை. பகைவரை வென்று அடையும் வாகை யிலும் பகைவரே இல்லை என்ற சிறப்பால் பெறும் வாகையே உயர்வானது என்பதை வலியுறுத்தும் வகையில், "புகழ் ஒடுங்காது, தார் ஒடுங்கல் செய்யாது" என்று ஆணித் தரமாகக் கூறுகிறார்.

"முன்பு நின்றுயர் மூவுல கத்தினும்
அன்பின் அல்லதோர் ஆக்கம்உண் டாகுமோ?"

என்று சொல்லி, அன்புச் செல்வமல்லால் வேறு கருவூலமில்லை என்று உணர்த்துகிறார்.

இந்தக் கருத்துக்கள் கொலுவீற்றிருக்கும் கோசலத்தில், பேதமும் தண்டமும் தேவை இல்லை. கம்பன் கூறுகிறான்:

" கூற்றம் இல்லைஒர் குற்றம்இ லாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையிற் செம்மையால்,
ஆற்றல் நல்லறம் அல்லதி லாமையால்
ஏற்ற மல்லது இழிதக வில்லையே. "

தூய சிந்தையராய் நல்லறமே ஆற்றி ஏற்றம் கொண்ட மக்களின் நாட்டில், குற்றம் ஏது? குற்றம் இல்லையெனில் கூற்றம் (தண்டனை) எற்றுக்கு? எனவே வன்முறைக் கருவிகளற்ற காவலாக அமைந்தது கோசல ஆட்சி. ஒளிவு மறைவுக்கும் பிரித்தலுக்கும் இவையனைய மந்திரச் சூழ்ச்சிக்கும் தந்திர வினைக்கும் கோசலத்தில் இடமில்லாது போயிற்று.

எனவே, கம்பன் கோசலத்தில் ஒற்றர் இருந்ததாகக் கூறவில்லை. மைந்தன் முதல் மாற்றான் ஈறாக யாவரையும் ஒற்றுடுவது அவநம்பிக்கையின் விளைவாக ஏற்படும் அச்சத்தின்பாற்பட்டது. எனினும் அதனைப் பீஷ்மர் ஆதரித்தார். கண்ணெனப் போற்றத்தக்க ஒற்றரைக் கொண்டு, எல்லார்க்கும் நிகழும் எல்லாவற்றையும் நாள்தோறும் விரைந்தறிய வேண்டும் என்றார் வள்ளுவர். அவர் ஒற்றரைத் துறவி வேடத்தில் அனுப்பவும் துணிவார். மேலும்,

" ஒற்றொற்றித் தந்த பொருளையும் மற்றுமோர்
ஒற்றினால் ஒற்றிக் கொளல் " (குறள் - 588)

என்று கூறி ஒற்றரையும் பிற ஒற்றரைக் கொண்டு கண்காணிக்கச் சொல்வார். பீஷ்மர், வள்ளுவர் முதலானோர் கண்ணெதிரே காட்சி தந்த சமுதாயங்களின் அரசியல் வகுத்த ஞானிகள். எனவே, குறிக்கோளின் உயர்வால் இத்தகைய தாழ்ந்த செயல்களுக்கு நியாயம் காட்டிப் போயினர். ஆனால் இச் சிறு செயல்கள், லட்சிய நாட்டின் தலைவனை தயரதனின் சிந்தனைக்கு ஒவ்வா. அவன் குடிகளிடம் வெறுப்பே கண்டதில்லை; அன்பையே கண்டவன். அவர்களது அன்பை நம்பாதவனுமல்ல. அவன் ஏன் ஒற்றரை நாட வேண்டும்? புறப்பகை யாதுமின்றிப் பெருவாழ்வு வாழ்ந்த கோசல மக்களின் தலைவன் ஒற்றாடக் கற்றிருக்க முடியாது. அதே போல், கோசல அமைச்சர் சந்தி விக்கிரகத்தையும் விரகினையும் அறியாதவரா யிருந்ததுடன், 'செம்மையில் திறம்பல் செய்யாத் தேற்றத்தார்' ஆகவும் விளங்கினர். செந்நெறி வழுவாத் தேர்ச்சிக்குரிய இவ்வமைச்சர்,

" நலமுதல் நலியினும் நடுவு நோக்குவார்;
சலமுதல் அறுத்துஅருந் தருமம் தாங்கினார் "

[நலமுதல்— அரசியல் நலத்தின் ஆணிவேர். சலமுதல் — கோபத்தின் அடிவேர்]

என்பான் கம்பன்.

அவர்கள் அரசியலைத் தாங்குவதே கருமம் என்று குன்றிய வட்டத்தில் சிறுக நோக்குவார் அல்லர். தருமம் தாங்குதலே தலையாய பணி என்ற தெளிவினை அடைந்தவர். அந்த ஞானந்தான், சலமுதல் அறுத்தலை இயலுவதாக்கியது. அத்தகையோர் அறமுதல் நலியினும் அரசின் நலனை ஓம்பவேண்டும் என்ற ஒற்றைச் சாண் நினைப்புக்கு இடம் தரார். மாறாக, அரசு நலத்தின் அடிவேரே நலிந்தாலும், நடுநிலை நழுவாதவராக விளங்குவர். மேலும், இந்த அமைச்சர்,

" தம்உயிர்க்கு உறுதி எண்ணார் தலைமகன் வெகுண்ட போதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர் "

என்பான் கம்பன்.

"தெரிதலும் தேர்ந்து செயலும் ஒருதலையாச்
சொல்லலும் வல்லது அமைச்சு"

என்ற குறளை நினைவூட்டுகிறது இது. ஆனால் இக்குறள் பிரித்தல் – பொருத்தல் கலையைக் குறிப்பிடும் குறளைத் தொடர்ந்து வருவதால், ஒரு தலையாச் சொல்லல் என்பதற்கு, "சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும் வகை சொல்லுதலும்" என்ற பொருள் கண்டார் பரிமேலழகர். கம்பன் கண்ட கோசலத்தில் அமைச்சர் சந்தி விக்கிரகத்தைப் பற்றிச் சிறிதும் அறியாதவர். எனவே, அவர்கள், 'நீதி விடாது நின்றுரைக்கும் வீரர்' ஆயினர். இதனை விஞ்சும் வீரம் ஏது? காவலன் கனன்று எழுந்தாலும், கலங்காது நின்று நீதியினை எடுத்துரைப்பதே உயர் வீரம் ஆகும்.

கோசல அமைச்சர் 'மும்மையும் உணரவல்லார்'; முக்காலமும் உணரவல்லாரென்றாலும் வருமுன் காப்பதற்காக முறை வழுவார். நன்மையே ஆகுக, தீமையே ஆகுக, தருமம் வழுவுதல் கூடாது. எனவே 'ஒருமை மொழியும் நீரார்' என்றான் கம்பன்.

இத்தகைய ஆட்சிக்குத் தலைவனாகத் தயரதன் விளங்கியதால், 'தனியறத்தின் தாயே' என்றும், 'தயாநிலையே' என்றும் அறம் வளர்க்கும் கண்ணாளனை இராமன் தந்தையைப் போற்றினான்.

நன்றி: **கலைமகள், நவ. 1958**



# கம்பன் போற்றும் வள்ளல் தன்மை

கோவை அ. கிருஷ்ணசுவாமி

ஒப்பற்ற இதிகாசமாகிய வால்மீகி முனிவரின் இராமாயணத்தை தமிழில் பெருங்காப்பியமாக வடித்துக் கொடுத்தவன் கவிச்சக்ரவர்த்தி கம்பன். இதற்கு உறு துணையாக இருந்து கம்பனை ஊக்குவித்தவன் சடையப்ப வள்ளல். இத்தகைய பண்ணை வெண்ணை சடையன் புகழ் என்றென்றும், எங்கும் பரவ வேண்டும் என்பதுதான் காவியம் எழுதும் போதெல்லாம் கம்பனின் உள்ளத் தெழுந்த ஆர்வம். இதைக் கம்பன் எவ்வாறு போற்றி மகிழ்கிருன் என்பதே இக் கட்டுரையின் நோக்கம்.

தமிழர் நாகரீகத்திலே செய்நன்றி மறவாமை என்பது ஒரு சிறந்த பண்பு வேறு எந்த நன்மையை மறந்து விட்டாலும், அக்குற்றத்திலுருந்து தப்பித்துக் கொள்ள வழியுண்டு. பிறர் செய்த நன்றியை மறந்து விட்ட ஒருவனுக்கு வாழ்வில்லை என்பதை,

> ' எந்நன்றி கொன்ருற்கும் உய்வுண்டாம்; உய்வில்லை
> செய்ந்நன்றி கொன்ற மகற்கு '

என்று வள்ளுவப் பெருந்தகை வலியுறுத்திக் கூறுகிருர்.

தமிழையும், தமிழ்ப் பாவலர்களையும் மக்களும் மன்னர்களும் எவ்வாறு போற்றி வந்தனர் என்பதை பிற நூல்களுடன் ஒப்பு நோக்கின், கம்பனது செய்ந்நன்றி மறவாத பண்பை வெள்ளிடை மலைபோல் எடுத்துக் காட்டலாம்.

வெண்பா பாடுவதில் பேர்பெற்றவன் புகழேந்தி. உவமை நலம் காட்டுவதிலும் உயர்ந்து நின்றவன். நள சரிதத்தை 3 காண்டங்களாக 407 வெண்பாக்களால் ஆக்கித் தந்தவன். இந்தப் புகழேந்தியை ஆதரித்தவன் முரணையம்பதியை ஆண்ட சந்திரன் சுவர்க்கி என்னும் சிற்றரசன். நளவெண்பா பாடுதற்கு ஆக்கமும், ஊக்கமும் கொடுத்தவன் இம் மன்னன் தான். தன்னை ஆதரித்தவனை நான்கு இடங்களில் நூலில் குறிப்பிடுகின்ருன். அறிமுகப் படுத்தும் போது, நிடத நாட்டு மன்னனுன நளனது மாவிந்த நகரமானது மனுநூல் கண்ட வாசகத்தின்படி அரசாண்ட சந்திரன் சுவர்க்கியினுடைய நாட்டைப் போல் இருந்தது என்பதை,

> " மாமனுநூல் வாழ வருசந் திரன்சுவர்க்கி
> தாமரையாள் வைகுந் தடந்தோளான் — காமருபூந்
> தாரான் முரணைநகர் தானென்றே சாற்றலாம்
> பாராளும் வேந்தன் பதி "

என்று காட்டுகிருன். காவியத்தை பாடிக்கொண்டே போய்,

> " மறைகள் வாழ்க, மாமறையோர் வாழ்க,
> மள்ளுவ நாட்டு மன்னன் சந்திரன்
> சுவர்க்கி புகழ் சிறப்போங்கி வாழ்க "

என்று நிறைவு செய்கிருன்.

மாபாரதத்தின் இதிகாசங்கள் இராமாயணமும், மகாபாரதமும். வியாச பகவான் அருளிச்செய்த பாரதக் கதையை தமிழிலக்கியமாகப் படைத்தவர் சந்தப் புலவர் வில்லிபுத்தூர் ஆழ்வார். ஆகவே அது வில்லி பாரதம் எனப் பெயர் பெற்றது. இவரை ஆதரித்தவன் பெண்ணை நாடான் கொங்கர் பூபதி எனப்படும் வக்கபாகை வரபதி ஆட்கொண்டான் என்கின்ற குறுநில மன்னன். வில்லியின் பிறந்த இடம் சனியூர். மன்னன் வேண்டுகோள் விடுத்தான்,

"நிறைந்த புகழ்ச் சனிநகர் வாழ் வில்லிபுத்தூரானை நோக்கி, 'நீயும் நானும்
பிறந்த திசைக்கு இசைநிற்ப பாரதமாம் பெருங்கதையைப் பெரியோர் தங்கள்
சிறந்த செவிக்கு அமுதமெனத் தமிழ்மொழியின் விருத்தத்தால் செய்க' என்றான்"

இதற்கிணங்க பாரதக் கதையை 46 சருக்கங்களில் 4068 பாடல்களால் பேரிலக்கியமாக வில்லிபுத்தூரார் பாடிமுடித்தார். தன்னைப் பாடும்படி ஊக்குவித்த ஆட்கொண்டானைப் பற்றி மறவாது காப்பியத்தில் அவனது வள்ளல் தன்மையை போற்றுகிறார்.

"சொல்மழை பொழிந்து துதிக்கும் நாவலர்க்கு
பொன்மழை பொழியும் கொங்கர் பூபதி"

என்று அறிமுகம் செய்கிறார். மேலும் பாடுகிறார்,

"கோவல்சூழ் பெண்ணை நாடான் கொங்கர்கோன் பாகை வேந்தன்
பாவலர் மானம் காத்தான் பங்கயச் செங்கை என்ன"

வறுமையால் வாடும் புலவர்களுக்குக் கொடுத்துக் கொடுத்து தாமரைபோன்ற சிவந்த கைகளையுடையவன் என்று கூறி மன்னனின் பெருமையை எடுத்தியம்புகிறார்.

ஆகவே இருபெரும் புலவர்களும் தங்களை யாதரித்த மன்னர்கள், தமிழறிஞர்களை காப்பாற்றினர்கள் என்று பொதுவில் சொல்லியுள்ளார்கள்.

இனிக் கம்பனைப் பார்ப்போம். கம்பன் பிறந்தது காவிரி நாடென்று எல்லோரும் அறிந்ததே. வளர்ந்ததுதான் திருவெண்ணெய் நல்லூர். நன்று செய்யும் இறைவன் சிவன் ஒருவனே என்கின்ற கொள்கையில் தேவார திருவாசகம் முதலிய சைவத் திருமுறைகளைப் போற்றி வளர்த்தவர்கள் சோழ மன்னர்கள். ஆகவே வைஷ்ணவ நாயகனாகிய இராமபிரானின் பெருங்கதையை அவர்கள் ஆதரித்தார்களா என்று சொல்ல முடியாது. சோழ மன்னனைக் காவிரி நாடன் என்று ஓரிரண்டு இடங்களில் தனது காப்பியத்தில் குறிப்பிட்டிருந்தாலும் கூட, கம்பனை ஆதரித்தான் என்று சொல்வதற்கு துணிவான சான்றேதும் இல்லை. இருப்பினும் கம்பனுக்கு குறையேதுமில்லை மறுவிலா மனத்துடன் மக்கள் ஆதரித்தார்கள், வாழ்த்தினர்கள். மகோன்னதமான கவிச்சக்ரவர்த்தி என்கின்ற சிரஞ்சீவிப் பட்டத்தை ஏகோபித்த ஒருமைப் பாட்டுடன் அளித்தார்கள். ஒட்டக்கூத்தார், சயங்கொண்டார். முதலிய புலவர்களுக்கு மன்னர்களால் கொடுக்கப்பட்ட பட்டங்கள் அவர்கள் காலத்திலேயே மறைந்து விட்டன ஆனல் மக்கள் கொடுத்த கவிச்சக்ரவர்த்தி என்கின்ற கௌரவம் என்றென்றும் நிலைத்து நிற்கும், என்பதில் ஐயமில்லை. அவர்கள் கம்பனை கவியரசு என்று ஏற்றுக் கொண்டாலும். முழுக்க முழுக்க பூரண மன நிறைவோடு ஆயுட்காலம் எல்லாம் கம்பனை வளர்த்தவர்-வளர்த்து ஆளாக்கி பெருங்காப்பியத்தைத் தமிழ் உலகிற்கு வரப்பிரசாதமாக அளித்த பெருமைக்குரியவர் சடையப்ப வள்ளல் என்றால் மிகையாகாது. அவர் கம்பர் பெருமானுடன் அடிக்கடி கூடிக்குலாவி அவரது

தெய்வமாக் கவிகளை நன்கு கேட்டு மகிழ்ந்து அநுபவித்தவர். வந்தபோதெல்லாம் வாருமென்றழைத்து வான் கருணை காட்டி முக்கனியும் திருவமுதும் படைத்துஉபசரித்து வழியனுப்புவது வள்ளலின் பழக்கம். ஒரு சமயம் கம்பன் வேற்றூருக்கு போய் ஒரு மாத காலமாகிவிட்டது. ஏக்கமும், துக்கமும் சடையப்பருக்கு. வந்தவுடன் 'என்னை மறந்தனையோ? என்று கேட்டவுடன் கம்பனின் உள்ளம் கனிந்து கண்ணில் நீர் முட்ட முட்டச் சொல்கின்றான்.

"ஆன்பாலும் தேனும் அரம்பைமுதல் முக்கனியும்
தேன் பாய வுண்டு தெவிட்டு மனம் — தீம்பாய்
மறக்குமோ? வெண்ணெய் வருசடையா! கம்பன்
இறக்கும்போ தேனும் இனி!

(அரம்பை – வாழை)

சடையப்பன் இல்லையெனில், சடையப்பன் உபசரணையில்லையெனில் நான் இறந்துவிடுவேன் என்கின்ற கம்பனின் உள்ளத்தை நினைக்கும்போது நமக்கெல்லாம் மெய் சிலிர்க்கிறது.

முன்பு வெண்ணெய் நல்லூர் இருந்த இடம் இப்போது கதிராமங்கலம் என்று அழைக்கப்படும் காவிரிக்கரையின் அருகில் உள்ள ஓர் சிற்றூர். கம்பன் இங்கு ஒரு வீட்டில் இருந்து இராமகாதையைப் பாடினான். ஓர் நாள் இரவு பெருமழை பெய்ததால் வீடு ஒழுக ஆரம்பித்து விட்டது. இதை அவ்வழியாக வந்த சடையப்பர் கண்ணுற்றார். துயர் உற்றோருக்கு தானே முன் வந்து துணை புரிபவன் அல்லவா? உடனே பக்கத்திலிருந்த தம் வயலில் முற்றி முதிர்ந்த கதிரை அறுத்து இரவோடிரவாக கம்பன் வீட்டுக் கூரையை வேய்ந்தார். இதைப் பின்பு தெரிந்த கம்பன் 'செந்தமிழ் என்றால் செந்தமிழ்ப் புலவன் என்றால் செல்வத்தையும் பார்க்கமாட்டான் என்கின்ற சடையப்பரின் விந்தைப் பண்பை வியந்து பாராட்டாமல் இருக்க முடியவில்லை. ஆகவே தான் வெண்ணெய் நல்லூருக்கு கதிர்வேய் மங்கலம் என்ற காரணப் பெயர் ஏற்பட்டு இன்று அது கதிராமங்கலம் என்று மருவி வழங்குகிறது. சடையப்ப வள்ளலின் ஆதரவு இல்லாமல் இருந்திருந்தால் இக்காவியத்தை தன்னால் செய்து முடித்திருக்க முடியாதென்று தொடக்கத்திலேயே சொல்லுகிறான்.

"நடையின் நின்றுயர் நாயகன் தோற்றத்தின்
இடை நிகழ்ந்த இராமாவ தாரப் பேர்த்
தொடை நிரம்பிய தோமறு மாக்கதை
சடையன் வெண்ணெய் நல்லூர் வயின் தந்ததே.

இத்தகைய வள்ளலை எப்படிப் பாராட்ட வேண்டும் என்பதைச் சிந்தனைக் கோட்டில் நின்று சீர்தூக்கிப் பார்த்து, தெளிந்து தெரிந்து அறிந்து, ஆராய்ந்து அற்புதமாக தனது காப்பியத்தில் சிறப்பான இடங்களில் அமைக்கின்றான். தமிழ் உள்ளவரை கம்பன் காவியம் கதிரவனைப் போல் ஒளிபெற்று விளங்கும். அவனது காவியம் உள்ளவரை சடையப்ப வள்ளலின் புகழ் குன்றாது ஓங்கி நிலைத்து நீடுழி வளர வேண்டும் என்கின்ற மன ஓட்டத்திற்கேற்ப நன்றியறிவுள்ளவனாக வாழ்ந்து காட்டியவன் கம்பன்.

வேள்வி காக்கச் சென்ற இராமனுக்கு விசுவாமித்திர முனிவன் சில தெய்வப் படைக்கலம் அளிக்கின்றான். அப்போது கவிக்கூற்றாக சொல்கின்றான் கம்பன்.

"உலகோர் பிணிக்கு மருந்து போன்றவன், சடையன் என்ற பெயருடையோன், வெண்ணெய் நல்லூரில் வாழ்கின்றவன், அவனுடைய உறுதிமொழி வாழ்க்கையை நாசமாக்கும் வறுமையை எப்படி அடித்து நொறுக்குமோ, அதுபோல பகைவர்களை அடித்து நொறுக்கும் படைக்கலங்களை இராமனுக்கு தந்தருளினர்"

இப்போது பாடலைக் காண்போம்

"மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தன சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யென்ன படைக்கலம் அருளினனே"

இலங்கைக்கு செல்ல சேதுபந்தனம் என்கின்ற பெரியதோர் கல்லணையை வானர வீரர்கள் கடலில் கட்டுகிறார்கள். இதற்கு கட்டிட பொறி இயல் நிபுணனாக (Civil Engineer) இருந்தவன் வானரத் தச்சனான நளன் என்னும் வீரன். வானரம் என்றாலே சேஷ்டை என்றுதானே பொருள். கூட்டமாகச் சேர்ந்து கொண்டால் அவைகளின் குரும்பையெல்லாம் பொறுமையாகப் பார்த்துக் கொண்டிருக்க முடியுமா, என்ன? காலினால் ஒரு மலை. கையினால் ஒரு மலை, வாலினால் ஒரு மலை ஆக இப்படி ஆயிரக்கணக்கான குரங்குகள் மலைகளைக் கொண்டு வந்து நிமிஷ நேரம் ஓய்வில்லாமல் அசுர வேகத்தில் எட்டுத்திக்குகளிலிருந்தும் வீசுகின்றன. அணையைக் கட்டும் பணியில் ஈடுபட்டிருக்கும் குரங்குகள் சிறிது தயங்கினாலும், ஏமாந்தாலும் கற்கள் கடலில் விழுந்து அணைகட்டுவது தாமதமாகும். மேலும் கற்கள் ஒன்றொடொன்று பொருந்தவில்லையானால் அணையே சரிந்து செய்த பணியெல்லாம் வியர்த்தமாகிவிடும். குமுதன் என்ற பெரிய வானர வீரன், ஆயிரகக்ணக்கில் மலைகளையும், பர்வதங்களையும் வேரோடு களைந்து வீசியதில் அவைகள் கடலையே கலக்கிவிட்டனவாம். தேவர்களுக்கு திருப்பாற்கடலை கடைந்த நிகழ்ச்சி நினைவிற்கு வந்து விட்டதாம். ஆகவே சீற்றத்துடன் வந்த மலைகளின் வேகத்தைக் குறைத்து பக்குவமாக பற்ற வேண்டும். இப்பணியை முறைப்படி செய்யாவிட்டால் இராம காரியம் தடைப்படும். இவைகளை யெல்லாம் மனதில் கொண்டு அணையில் நின்று கொண்டிருக்கும் நளன் ஒவ்வொரு மலையையும் லாவகமாகப் பற்றி, மலையின்மேல் மலையை ஒன்றொடொன்று பொருந்துமாறு வைத்து கட்டுமானம் சிதறாமல் கொத்தனார் வேலையை தனது சிற்ப வித்தையால் மிக நேர்த்தியாகக் கட்டி முடிக்கிறான் சேதுவை.

நாட்டினில் ஏற்பட்ட கலவரத்தினாலோ, பஞ்சத்தினாலோ மக்கள் வேறு நாட்டிற்கு வாழ்வைத்தேடி போகிறார்கள். அகதிகளாகப் போகும்போது சிற்சில இடங்களில் சிலபேர் உதவுகின்றனர். பல நாள் ஆதரிப்பார் யாரும் இல்லை. நிரந்தர வாழ்வும் அமையவில்லை. கடைசியாக தஞ்சை அரசனிடம் செல்கிறார்கள். சிறிது நாள் காப்பாற்றினான். மேலும் மேலும் உதவி செய்ய தன்னால் இயலவில்லை யென்று கூறக் கேட்டவுடன் மக்கள் திகிலடைகிறார்கள். இனி எங்குப் போவது என்பதுதான். அகதிகளில் ஒரு சிலர் திருவெண்ணெய் நல்லூருக்கு செல்கிறார்கள். பசிப்பிணியை போக்கிக் கொண்டனர். முதலில் வந்தவர் 100 பேர், 2-ம் நாள் 200 பேர், 3-ம் நாள் 300 பேர். இவ்வாறாக அகதிகள் கூட்டம் திருவெண்ணெய் நல்லூரில் ஆயிரக்கணக்கில் சேர்ந்து விடுகிறது. எவ்வண்ணம் வேண்டுகினும் அவ்வண்ணம் அன்றே இரங்கி ஈந்தருளும் மனப்பாங்கைப் பெற்ற சடைப்ப வள்ளல் தஞ்சம் என்று வந்தவர்களை பரிவுடன் நோக்குகின்றான். கால தேவையை முன்னிட்டு அன்னசத்திரம் வைத்து எல்லோருக்கும், உண்டியும், உடையும் கொடுத்து தங்குவதற்கு இடமும் தருகின்றான். கூட்டத்தினரை, குழந்தைகளை, பெண்களை, வாலிபர்களை, வயோதிகர்களை, ஊன முற்றோர்களை இப்படி வகை வகையாகப் பிரிக்கின்றான் நிலங்களையும், குளங்களையும் பாசனங்களையும் அவர்களுக்கென ஒதுக்குகின்றான். ஒரு நாள் ஒரு வேளை சோறு என்று போடாமல் கழனிகளில் வேலை வாய்ப்பு கொடுத்து எல்லோருக்கும் புனருத்தாரண வாழ்வை அமைத்துத் தருகிறான். (கதிராமங்கலத்தில் அன்னம் பாலித்த

இடம் 'சடையன் திடல்' என்று இன்றும் அவனது புகழை பறை சாற்றிக் கொண்டிருக்கிறது.) எல்லோரும் சடையப்ப வள்ளலை வாயார, மனமார வாழ்த்தி இன்புற்றிருக்கிறார்கள் இதை நேரில் கண்டனுபவித்து பேரானந்தம் அடைந்தவன் கம்பன். இக்காட்சியை சேது பந்தனப் படலத்தில் அற்புதமாக அமைக்கின்றான்.

" மஞ்சினில்த் திகழ்தரு மலையை மாக்குரங்கு
எஞ்சுறக் கடிதெடுத்து எறிய வே நளன்
விஞ்சையில்த் தாங்கினன் சடையின் வெண்ணெயில்த்
தஞ்சம்என் றோர்களை தாங்கும் தன்மைபோல் "

இனியும் இப்பாடலுக்கு பொருள் கூற வேண்டியதில்லை அல்லவா. கம்பன் இவ்வாறு பல இடங்களில் சடையன் பெருமையைக் கூறிக்கொண்டே போய் இறுதியில் எல்லாவற்றிற்கும் மேலாக முத்தாய்ப்பு போன்றதோர் நிகழ்ச்சியை அமைக்கிறான். இராமாயணக் காப்பியம் நிறைவுறுகிறது. திருமுடி சூட்டும் படலத்தில் வள்ளலுக்கு அழியாத பெருமையை அளிக்கிறான். அரியணை அநுமன் தாங்க சீதா பிராட்டி இளையோர்கள் சமேதமாக இராமபிரான் முடி சூட்டிக்கொள்கிறார். கிரீடத்தை கொடுக்கிறார்கள். யார் கொடுத்தார்கள் என்பதுதான் கேள்வி. சடையப்ப வள்ளலின் முன்னோர்கள் எடுத்துக் கொடுக்க வசிட்டன் வாங்கி இராமன் சிரத்திலே சூட்டினான் என்று கூறுகிறான். தருமகுணம் - கொடைத்தன்மை யென்பது ஞான பரம்பரை மட்டுமன்று ஊன பரம்பரையிலும் கூட வந்துள்ளது. ஆகவேதான் சக்ரவர்த்தி திருமகன் திருமுடி சூட்டு விழாவில் சடையனின் முந்தையர் கிரீடம் செய்து அதை குலகுருவின் கரத்தில் அளிக்கும் அமர வாழ்வு பெற்று வாழையடி வாழையாக சீரும் சிறப்புமாக வாழ்ந்து வந்தார்கள் என்கின்ற உதாரகுண பரம்பரையை நம்முன் மறக்க முடியாத காட்சியாக வைக்கிறான். இனிப் பாடலைப் பார்ப்போம்.

" அரியணை அனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்தப்
பரதன்வெண் குடைக விக்க இருவரும் கவரி வீச
விரிகட லுலகம் ஏத்தும் வெண்ணெய்மன் சடையன் வண்மை
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான் மௌலி

புலவர்களில் புகழேந்தியும், வில்லிபுத்தூராழ்வாரும் தங்களை யாதரித்த சிற்றரசர்களை எவ்வாறு போற்றினார்கள் என்று ஒப்பு நோக்கினால், கம்பன் தன்னைப் புரந்த ஓர் சாதாரண குடிமகனாகிய சடையப்ப வள்ளலின் சொல்லுறுதியை - கொடையை - புகழை பாரம்பரியப் பரம்பரைப் பெருமையை தனது நன்றியறிதலின் மூலமாக இமயம் அளவு உயர்த்திக் காட்டி விட்டான் என்று திட்ட வட்டமாகச் சொல்லலாம்.

இப்படி வியக்கத்தக்க முறையில் வாழ்ந்து காட்டிய கம்பனுக்கு நாம் செய்யும் கைமாறென்ன என்பதை எண்ணிப் பார்க்க வேண்டாமா! கம்பனது காவியத்தை மக்களிடம் பரப்பிக்கொண்டு வரும் தமிழறிஞர்களையும், புரவலர்களையும், கம்பன் கழகங்களையும் போற்றி ஆதரவு தந்தால் தான் தமிழ் மக்களாகிய நாம் நல்லதோர் முறையில் கம்பனுக்கு நன்றி செலுத்தியவர்களாக ஆவோம் என்று கூறலாம். மக்களின் மத்தியில் இத்தகையதோர் நன்றியுணர்வு தோன்றி, கம்பனைக் கேட்டும் படித்தும் மானிட சமுதாயம் மேம்பாடுற்று, நன்னெறியில் இனிது வாழ எல்லாம் வல்ல எம்பெருமான் இராமபிரான் திருப்பெருங் கருணை துணை நிற்குமாறு அவனது திருவடிகளையே வந்தித்து வாழ்த்தி வணங்குவோமாக.

கம்பன் புகழ் வாழ்க!

கன்னித் தமிழ் வாழ்க!



# தாரை - சொல்லின் செல்வி

**நா. வரதராஜுலு நாயுடு**

1.1 'மால் பெரும் கடகரி முழக்கம் வாள் அரி தன் செவித்தலத்து ஏற்பது என்ன' (மிகப் பெரிய யானையின் முழக்கத்தை விழித்துள்ள சிங்கம் காதில் கேட்டது போல), சுக்கிரீவனுடைய அறை கூவலை வாலி கேட்டு போருக்கு எழும்போது, தாரை கம்ப நாடகத்தில் தோன்றுகிருள். 'ஆயிடை, தாரை... இடை விலக்கினுள்; வாயிடைப் புகைவர, வாலி கண் வரும் தீயிடை, தன் நெடும் கூந்தல் தீகின்ருள்' (வாலியின் கண்ணில் தீப் பொறி பறக்க. வாயில் புகைவர, அவ்வெப்பத்தில் தாரையின் கூந்தல் தீய்கிறது).

மண்டோதரியும் செய்யாத விலக்கல் இது : அவள் வாலியின் 'மிகுதிக் கண் மேற்சென்று இடி'த்தல் அவளுடைய உரிமையைக் காட்டுகிறது. வாலி 'விலக்கலை; விடு, விடு; (சுக்கிரீவன்) உலக்க (மடிய) இன் உயிர் குடித்து ஒல்லை (விரைவில்) மீள் குவல்' என்கிருன். தாரை,'கொற்றவ, (சுக்கிரீவன்) பெரும் திறல் (வலிமை) பெற்றிலன்; போர் செயற்கு உற்றது நெடும் துணை உடைமையால்' என்ருள். அவனுடைய இயற்கைத் திறமை மிகுதியால் அன்று; துணைவலிமையால் போருக்கு வந்துள்ளான். வாலி இராமனுடைய பெருமையைக் கூறி 'பாவி உன் பெண்மையால் பிழைத்தனை' (பிழை செய்தாய், இராமனைத் தவருக எண்ணிஞய்) எனவும், மறுபடியும் சுக்கிரீவன் 'உயிர் குடித்து' வருவேன்; கலங்காதே என, தாரை 'உரை விளம்ப அஞ்சினுள்' சுக்கிரீவன் பால் வெறுப்பால், அவன் பெயரை இருவரும் கூறவில்லை; 'விளித்துளான்' 'உருத்தவன்', 'புன்தொழில் குரங்கு' என்பனவே அவனுக்கு இடும்பட்டங்கள், அதனேடு, முதல் காட்சி முடிகிறது.

* * * *

1.2 அடுத்த காட்சி, வாலி இறந்தபின், இராமனும், சுக்கிரீவனும், அங்கதனும் களத்தை நீத்துப்போனபின், 'தாரை கேட்டு வந்து அவன் (வாலி) மெய்யில் வீழ்ந்தாள்; ஏங்கினுள்; விம்மி உருகினள்; அரற்றினுள்.' வாலி அவளுடைய ஆருயிர், உள்ளம், அரசன், பொய் உரையாத புண்ணியன், மகன் (கணவன்), இறுதியில் இராமனைப்பற்றி ஒரு கருத்தே அவள் வாயால் வெளி வருகிறது.

"தருமம் பற்றிய தக்கவர்க்கு எலாம்
கருமம் கட்டளை என்றல் கட்டதோ?"

அறத்தைப் பற்றுக்கோடாகக் கொண்டு, தம் செயல் வழுவாது, நடுவுநிலைமையில் நின்ற வர்க்கு அவர் செயல் உரைகல் என்பது கட்டுக்கதை ஆகி விட்டதோ? 'தக்கார்' பெரியோர்; அவர் பெருமைக்கும் சிறுமைக்கும் அவர் தம் 'கருமம் அன்ருே கட்டளைக் கல்?' வள்ளுவன் உரை பொய்த்ததோ, இவ் இராமனுல்? 'வாலியைப் படுத்தாயலை,... மன் அற வேலியைப்படுத்தாய்' என்ற வாலி கூற்றின் எதிரொலி இது. இராமனுல் அரச நெறி அழிந்ததற்கு தாரையும் வாலியும் இரங்குகின்றனர்.

அப்போது, அனுமன் அவள் இதுகாறும் வாழ்ந்த இடத்துக்குப் போக 'ஏவி'னுன், என்கிருர் கம்பன். இன்றுவரை பட்ட மகிஷியாக இருந்த, இப்போது உணர்வு அற்று, நின்ற தாரையை, 'ஏவல், கூவல் பணி செய்யும்' ஒருவன் 'ஏவு'வதா?

இனி, காவியத்தில் தாரை தோன்றும் இறுதிக் காட்சியைக் காண்போம்.

* * * *

1.3 இலக்குவன் சீற்றத்துடன் கிட்கிந்தையுள் புக, சுக்கிரீவன் மதுவால் மதி மயங்கிக் கிடப்ப, அங்கதன் மாருதியுடன் தாரை கோயிலை அடைந்தான். செய்திகூறி, மேல் செயத்தக்கது என்?' என்று அவர்கள் கேட்ப, தாரை "நீர் எலாம் அயல் நீங்குமின், யான் நேர்ந்து வீரன் உள்ளம் வினவுவல்" என்றாள். வீரன் வழியை மகளிர் குழாத்தினால் விலக்கினாள். இலக்குவனுடைய வில்லும் வாளும் மகளிருடைய அணிதொறும் பிரதிபலித்தன, மின்னின. இலக்குவன் இம் மகளிர் சேனையைப் பார்க்கவும் அஞ்சினான்.

இலக்குவன் எப்பொழுதும் இராமனைப் பிரிகிலாதான்: அதை வலியுறுத்தி, 'ஐய, நீ ஆழிவேந்தன் அடிஇணை பிரிகிலாதாய்; எய்தியது என்னை?' எனத் தாரை கேட்கிறாள். அவன் வந்த காரியம் அவளுக்குத் தெரியும். அக்காரியத்தை மாற்றவே அவள் வந்தது; தெரியாதவள் போலக் கேட்கிறாள். 'ஆர் கொலோ உரை செய்தார்?' என இலக்குவன் முகம் எடுத்து நோக்க, தான் வந்த காரியத்தை மறந்து, அவன் தன் தாயரை நினைந்து நைந்தான். ஏன்? பதிமூன்று ஆண்டுகளுக்கு முன் சித்திரக்கூடத்தில் கண்ட தன் தாயரின் நினைவு வருகிறது. 'மங்கல அணியை நீக்கி, மணி அணி துறந்து', கோதை (சூடும் பூ) இன்றி, குங்குமம் சந்தனம் இன்றி, கழுத்தொடு போர்த்த ஆடையுடன் கைம்மை கோலத்தில் அன்று கண்ட காட்சியை இன்று மறுபடிக் காண்கிறான். 'என்னை ஈன்ற இருவரும் இனையர் ஆம்' என்ற நினைவு வருகிறது. (தசரதன் 'தாரம் அல்லள், துறந்தேன்' என்ற கைகேயியை இலக்குவன் தாயாக மதிக்கவில்லை) அயர்ப்பு சென்ற நெஞ்சினன் நெடிது நின்றான். கேட்டவளுக்கு எதிர்மாற்றம் விளம்புகிறான். 'ஐய, சிறியவர் தீமை செய்தால் ஆறுவாய்' என 'இசையினும் இனிய சொல்லாள்' கூற, இலக்குவன் 'அருள் வர, நாண் உட்கொண்டான்.' தன் கருமத்தால், இவ் ஏழையர் பால் சினம் கொண்டதற்காகக் கொண்ட நாணம்.

இப்போதே, மாருதி அருகில் வந்தான். இலக்குவன் அவனை 'நீயும் அயர்த்தனை (மறந்தனை) ஆகும் அன்றே' எனக்கேட்டு அவனோடு சுக்ரீவன் இருக்கைக்குப் போக, தாரை மாதர் குழாத்தொடும் போனாள். அவள் இலக்குவன் உடன் போகவில்லை.

இடையில் தாரை பேச்சு இலது. காவியத்தில் இனி அவளுக்கு இடம் இல்லை. இக் காட்சிகளில் வால்மீகி கண்ட தாரையை நாமும் காண்போம்.

* * * *

2.1 வால்மீகத்திலும் தாரை வாலியைத் தடுக்கிறாள். ஆனால், அவள் பேச்சின் அழுத்தம் கம்பனிலிருந்து வேறுபட்டது.

இராமனுடைய பெருமைகளைத் தாரை கூறுகிறாள்: 'இராமன் அயோத்தி வேந்தனுடைய மகன், சூரன், வெலற்கரியவன். பகைவரை அழிப்பவன், சரண் அடைந்தவரைக் காப்பவன், நற்குணக் கடல், புகழின் கொள்கலம், (**'யச ஸச்ச ஏக பாஜநம்'**) அளத்தற்கு அரியவன் (**'அப்ரமேயோ'**) 15.22. மேலும் சுக்கிரீவன் உன் இளவல்; உன்னால் காப்பாற்றப்பட உரியவன்; அவனுக்கு இள அரசுப் பட்டம் சூட்டு'. ஒரு பால் இராமனிடம் அச்சமும், மற்றோர் பால் சுக்கிரீவனை வாலி காக்க வேண்டும், என்ற நினைப்பும் அவளை உந்துகின்றன.

'தர்மம் அறிந்தவன், தக்க இன்ன தகாதன இன்ன என்ற பாகுபாடு அறிந்தவன், ஆகிய இராமன் என் பொருட்டு பாவம் செய்யான்' என்று வாலியும் உறுதியாக நினைக்கிறான் (16.5).

வாலி சுக்ரீவனை 'வென்று திரும்புகிறேன்' (**'ஜித்வா நிவர்திஷ்யே'** *16.10*) என்று புறப்படுகிறானே அன்றி கம்பனில் போல 'கொன்று வருகிறேன்' என்று கூற வில்லை; அவனைக் 'கொல்ல மாட்டேன்' என்றே தாரைக்கு வாக்குறுதி தருகிறான் (*16.7*).

விநாச காலம் வந்து உற்றதால், தாரையின் நன் சொற்களை ஏலாத வாலியைத் தாரை தழுவி, மெல்ல அழுது கொண்டு, பிரதக்ஷிணம் செய்து, அவன் வெற்றியை விழைந்து, தீமைகளை விலக்க **'ஸ்வஸ்த் யயனும்'** செய்து விட்டு, துக்கத்தால் மயங்கி, வீட்டுக்குள் நுழைந்தாள்.

*　　*　　*　　*

*2.2* வால்மீகத்தில் வாலி அங்கதனை இராமனுக்குக் கையடைப் படுத்தவில்லை. தாரையைப் பற்றி இராமனிடம் சொல்கிறான்: "தாரை தவத்தி (**தபஸ்வி நீ**); எனினும், நான் இழைத்த தவற்றிற்காகச் சுக்கிரீவன் அவளை அவமதிக்கக் கூடும்; அவமதிப்புக்கு அவள் உரியவள் அல்லள்" (*18.55*).

வாலி உயிர் நீங்கும் தறுவாயில் தாரை களத்துக்கு ஓடிவருகிறாள். வழியில் பயந்து திரும்பி வரும் குரங்குகளைக்கண்டு சிரிக்கிறாள். (*19 17.*) வாலியைக் கண்டாள்.

இந்திரனை ஒத்த பராக்ரமம், பெருங்காற்று வருவதும் போவதுமான மூச்சு, இடியுடன் மழை பொழிந்து ஓய்ந்த மேகம் போல, மலை கிடந்தது எனத் தோற்றம், கேவலம் அரசுக்காக தம்பியால் வீழ்த்தப்பட்டான், மாமிசத்துக்காகப் பொருத இரு சிங்கங்களுள் ஒன்று வீழ்ந்தது போல, இவ்வாறு வால்மீகி வாலியைக் கம்பீரமாக வருணிக்கிறார் (*19.22-24*) **'ஆர்ய புத்ர'** என்று அழைக்கிறாள். துக்கம் மேலிட அழுது வீழ்கிறாள்.

இராமனையும் சுக்கிரீவனையும் காண்கிறாள். வாலியிடமே பேசுகிறாள். இன்னம் வாலி இறக்கவில்லை.

அனுமன் தாரையைத் தேற்றுகிறான்: தேறுதலிலும் பல சூதுக்களைக் காண்கிறோம்: 'அங்கதனைக் காப்பது உன்கடன்; நீ யாவும் அறிந்தவள் (**'விதுஷி'**); வாலியின் ஆயுள் எல்லை அடைந்து விட்டது; அவன் பட்டது, அரச நீதிக்கு ஒவ்வும்; தேவி, **உன்** அங்கதன் (**'துவ அங்கத:'**) கரடிகளுக்கும் குரங்குகளுக்கும் அரசன் ஆவான்; அவனுடைய ராஜ்ய அபிஷேகத்தையும் சிங்காதனத்தில் அமருவதையும் நீ காண்பாய்' (*21:4-11*).

சுக்கிரீவனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தது இந்த அனுமனே. அங்கதனுக்கு அரசுரிமை தர அவனுக்கு எவ்வித உரிமையும் இல்லை.

இந்தத் தேறுதல் பொய் உரைக்குத் தாரை அசையவில்லை. நிதானமாக, 'நூறு அங்கதர் இருப்பினும் ஒரு வாலியின் ஆலிங்கனத்துடன் சிதையில் சாவதே சிறந்தது; நான் வானர ராஜ்யத் தலைவி அன்று (அவனுக்கு அரசு தர; நீ மட்டும் தலைவனா, இப்படி வழங்குவதற்கு? என்னும் கருத்து தொனிக்கிறது); செய்ய வேண்டுவனவற்றைச் சுக்கிரீவன் அறிவான்; தந்தையே, தந்தை ஸ்தானத்தில் இருக்கும் சுக்கிரீவனே, அங்கதனுக்குச் செய்ய உரியவன்; தாய் அன்று' எனச் சுட்டிக் காட்டுகிறாள் (*21.15*)

அப்போதுதான் வாலிக்கு உணர்வு வந்தது. இராமனை **'ராஜன்'** என விளித்து, 'தாரையின் மகன் (அங்கதன்) உன்னை ஒத்த வீரம் உடையவன்; இராக்கதருடன் நிகழும் போரில் அவன் முன் அணியில் நிற்பான் (சுக்கிரீவன் அன்று எனத்

தொனிக்கிறது)' என்பான். சுக்கிரீவனை 'குரங்குகளுக்கு அரசனே' என விளித்து, 'நீயே இவனை (அங்கதனை)க் காப்பாய். நீயே பிதா, தாதா (கொடுப்பவன்), யாவுமே' எனவும், பின் அங்கதனை 'சுக்கிரீவன் பால் இரு' (**'சுக்ரீவ வசகோ பவ'**) எனவும் கூறுகிறான் (22:20,22). இதுவே வாலி செய்யும் கையடை; இராமனுக்கு அன்று. தாரையின் நிலையை வாலி எண்ணுகிறான்; 'செல்வம், தானியம் மகன், பரிவாரங்கள் யாவும் இருந்தென்ன? அவளை விதவை என்றுதானே சொல்வார்கள்!' (22:12-13)

வாலி இராமனிடம் பேசவில்லை; தாரையிடமும் பேசவில்லை. தன் உடலில் தைத்த அம்பைப்பறிக்கிறான்; அம்பைப்பறித்து அதில் இருந்த இராமநாமத்தால் எய்தவனை அறிந்தான் என்பது கம்பராமாயணம். உதிரம் பீறிடுகிறது. தாரையும் அங்கதனும் அவனிடம் போக, அவன் தன் கழுத்தில் இருந்த பொன் மாலையை அங்கதனுக்குத் தந்து உயிர் நீத்தான்.

உடைவாளைத் தந்ததாகக் கம்பன் கூறுகிறார்.

தாரை புலம்பி உணர்வு இழந்தாள். உணர்வு பெற்று, சோகத்தால் வாடியவள் ஆயினும், புலன்கள் அனைத்தும் வென்றவள் (**'மனஸ்வினீ'** 24:30) இராமனைப் புகழத் தொடங்குகிறாள். "நீ அளத்தற்கு அரியவன், கிட்டுவதற்கு அரியவன், புலன்களை வென்றவன், சிறந்த அறத்தைக் காப்பவன், அழியாத புகழ் உடையவன், தூரதர்சி, பூமி போன்ற பொறை உடையவன், குருதி போன்ற சிவந்த கண்களை உடையவனே! (24.31) என்ற சுலோகத்திற்கு பெரிய வாச்சான்பிள்ளை சிறந்த விரிவான உரை இட்டருளி உள்ளார். அவ் உரையில் வாலிவத ஆய்வு முழுவதும் காண்கிறோம்.

இராமனை நோக்கிய தாரை வாயில் வரும் சொற்கள் யாவும் துதியாக அமைகின்றன. தன்னையும் அதே அம்பால் கொன்றுவிடுமாறு வேண்டுகிறாள். இராமன் அவளை, **'வீர பத்நி'**, என்று அழைத்து, 'இது விதியின் செயல், வீரபத்நிகள் இதற்காக அழார்' எனக்கூறி; அங்கதனுக்கு 'இளவரசு'ப் பட்டம் (24 43) சூட்டுவதாக– முன், அனுமன் அரசன் ஆவான் என்று சொன்னதைத்திருத்தி– உறுதி தந்து அனுப்புகிறான். தாரை பேச்சு ஓய்ந்தாள்.

* * * *

2.3 இராமனுடைய ஆணையைத் தாங்கி இலக்குவன் நேராகக் கிட்கிந்தையுள் புகுந்த போது சுக்கிரீவன் தாரையோடு இன்ப நுகர்வில் இருந்தான் (**'தாரயா ஸஹித: காமீ ஸக்த.** 31:22). அங்கதன் மட்டுமே இலக்குவன் அருகில் வந்தான். இலக்குவன் அவனைக் 'குழந்தாய்' (**வத்ஸ**) என்று விளித்துத் தன் வருகையைச் சுக்கிரீவனுக்கு அறிவிக்கச் சொல்கிறான். அங்கதன் அந்தப்புரத்துள் சென்று தாய் தாரையின் திருவடிகளைத் தொட்டு வணங்கி இலக்குவன் வருகையைக் கூறினான். உடன் இருந்த அனுமனும், அமைச்சர் இருவரும் சுக்கிரீவன் எழுந்து சென்று இலக்குவனை வணங்கி அவன் சீற்றத்தைத் தணிவிக்குமாறு வேண்டினர்.

ஊருக்குள் வந்து கொண்டிருக்கும் இலக்குவன் காணும் கிட்கிந்தையின் எழிலை இவ்விடத்தில் கவி வர்ணிக்கிறார்.

சுக்கிரீவன் இலக்குவனைக் காண அஞ்சி, தாரையை 'அழகிய புருவம் உடையவளே' (**ஸுப்ரூ**), 'குறை அற்றவளே' (**அநிந்திதே**), 'செயிர்ப்பினும் அழகுள்ளவளே' (**பாமிநி**) என விளித்து, 'இலக்குவன் பெண்களுக்கு ஊறு செய்யான், நீ சென்று அவனைச் சாந்தம் செய்' என வேண்டிக்கொள்ள அவள் வெளி வரவும் இலக்குவன் மாளிகை வாயில் அடைகிறான்.

நடை தள்ளாட, மதத்தால் மருண்ட கண்களுடன், மேகலை நீண்டு உடை நெகிழ, கள்குடியால் இயற்கையான நாணம் அகல, காம முதிர்ச்சியின் குரலோடு தாரை இலக்குவனைக் கண்டு பேசலுற்றாள் (33.38,40) தாரையின் இக்கோலத்தை உரை ஆசிரியர்கள் தெளிவின்மைக்கு எடுத்துக்காட்டாகப் பயன்படுத்தி உள்ளனர். திருப்பாவை 10-ல், 'தேற்றமாய் வந்துதிற' என்ற இடத்தில் தாரை போல் வராதே என்பது உரை. இலக்குவனுக்கு அவள் கோலமும் பேச்சும் பொறுக்க முடியவில்லை "சிற்றின்பத்தில் திளைத்த தாரையே **(காம வ்ருத்த:)** உன் **'பர்த்தா'** (உன்னைத் தாங்குபவன்) இன்பத்தில் இறுமாந்து தன் கடமையை மறந்தான். கள் உண்ணல் அறம், பொருள், இன்பம் மூன்றையும் நாசமாக்கும்' (33.43,46).

தாரை 'மஹரிஷிகளும், தர்ம தவத்தினரும் காமத்தில் ஈடுபட்டிருந்தன ரன்றோ! இவன் ஈடுபடுவதில் வியப்பு இல்லை' எனச்சுக்கிரீவனுக்காகப் பரிந்து பேசி, 'கோபத்தால் நேரிடும் கேடுகளைக் காட்டிலும் காமத்தால் நேரிடும் கேடுகள் குறைவு; கோப வசத்தால் கட்டுண்ட நீர் காம வசப்பட்டவர் இயல்பை நன்கு அறியீர்' என வாதாடுகிறாள். சுக்கிரீவன் காமத்தால் நாணத்தைத் துறந்தான்; தன் வயம் அற்று உள்ளான். அவனோடு சினந்து பயனில்லை என்கிறாள். அவளுடைய கண் மது மயக்கத் தால் சுழல்வதைக் கவி மறுபடியும் கூறுகிறார்; **'மதவிஹ்வலாக்ஷீ'** (33.58)

தாரை இலக்குவனை வீட்டுக்குள் அழைத்துச் சென்றாள். வீட்டின் வருணனை ரஸமானது. உருமையைத் தழுவிக் கட்டிலில் கிடந்த சுக்கிரீவனை இலக்குவன் கண்டான்; கண்ட பெரு வியப்பால், அந்தத் தீரனுடைய கண்கள் அகன்றன. இந் நிலையில் தன்னை அவன் கண்டு விட்டானே என்ற வியப்பால் சுக்கிரீவனுடைய கண்களும் அகன்று விழித்தன. (33 66) **'விசால நேத்ர: ஸ விசால நேத்ரம்'** என்ற சொல் தொடரின் கருத்தைப் பெரிய வாச்சான் பிள்ளையால் அறிகிறோம்.

உருமையும் பிற மாதரும் நீங்கினர். இலக்குவன் இராமன் ஆணையைக்கூற, சுக்கிரீவன் ஏதும் கூறவில்லை. தாரையே கூறுகிறாள்; "இவன் (சுக்கிரீவன்) இராமனுடைய அருளால் வானர ராஜ்யத்தைப் பெற்றான் அதனோடு உருமையை யும் என்னையும் பெற்றான்; (35.5), முன் பலவாறு கஷ்டப்பட்டவன் இப்போது 'முன் செல்வம் இல்லாத அவர் பெற்ற பொருள் போல்' இன்பம் துய்த்தல் தவறா? உன் குரு விச்வாமித்ரனும் இவ்வாறே மேனகையுடன் இன்பம் துய்க்கவில்லையா? (6,7), இது இயற்கை, **'தேஹ தர்மம்'**; சிறிது காலத்தில் தளர்ச்சி எய்துவான், இதை இராமன் பொறுப்பான் (9), இராமன் விரும்பினால், இவன் உருமையையும், என்னையும், அங்கதனையும், அரசையும் செல்வங்களையும் துறக்கச் சித்தமாக உள்ளான் (13).

அரக்கரைக் கொன்று, சீதையை இராமனிடம் சேர்ப்பிப்பது சுக்கிரீவ னுடைய பொறுப்பு; ரோஹிணியோடு சேர்ந்த சந்திரன் போல இராமன் விளங்கு வான். (14) (ஏன் சுக்கிரீவன் மட்டும் மனைவியரைத் துறக்க வேண்டும்? மனைவியைப் பெற முயலும் ஒருவன், பிறன் தன் மனைவியைத் துறக்க வேண்டும் என்று விரும்பு வானா?) உங்களுக்கும் குரக்கரசன் துணை வேண்டியுள்ளது. அவன் உங்களுக்காகத் தன் படைகளை அழைத்து வர ஆள் அனுப்பியுள்ளான் (19). உன் கோபத்தை ஒழி; உன் கோபத்தைக் கண்ட வாநரஸ்த்ரீகள் பயந்து ஒளிந்து கொண்டிருக்கிறார்கள் (23). (சுக்ரீவனுடைய பயத்தைக் கூறவில்லை). ஒரு சருக்கம் (35) முழுவதும் தாரையின் பேச்சு சாதுர்யமாக அமைந்துள்ளது. இடையில் கவி, சுக்கிரீவன் பயத்தினால் ஆடையை நனைத்ததை (சிறுநீர் கழித்ததை) யும் சொல்லுகிறார் (36.2). சுக்கிரீவன் இலக்குவனைக் கண்டது முதல் எதுவுமே பேசவில்லை. பேசியதெல்லாம் தாரையே.

சுக்கிரீவன் தன் கழுத்தில் இருந்த மாலையைக் களைந்து விட்டு, கழிவிரக்கம் எய்தி, இலக்குவனிடம் மன்னிப்பு வேண்டுகிறான்.

தாரை இக் காட்சியோடு காவியத்தினின்று அகல்கிருள். அவளுடைய பேச்சில் பல நயங்களைக் காணலாம். மாருதி பேச்சில் வரும் உயர்வு நவிற்சிகள் அவள் பேச்சில் இல.

தாரையின் பாதிவ்ரத்யம், பிற்கால நெறியின்படி, வால்மீகத்தில் பழுதுற்றிருக்கலாம். ஆனல், அவள் ‘சொல்லின் செல்வி’ என்பதில் ஐயம் இல்லை.

* * * *

3.1 மஹாபாரத ராம காதையில் வரும் தாரையும் சுக்கிரீவனுடன் வாழ்கிருள். இதிஹாஸ கால மரபு இதுவாக இருந்திருக்கும்.

3.2 காளிதாசன் தாரையின் பெயரையே எங்கும் குறிப்பிடவில்லை.

3.3 இராமனுடைய வீரத்தைப் புகழ்ந்து வாலியைப் போருக்குச் செல்லாமல் தடுக்கத் தாரை முயல்வதில்துளஸிதாசர் வால்மீகியைப் பின்பற்றுகிருர். தாரையின் கைம்மைப் பண்பில் கம்பனைப் பின்பற்றுகிருர். தாரைக்கு வேறு சிறப்பு எதுவும் அவர் காவியத்தில் இலது.

❀ ❀ ❀

# கோதண்ட இராமனுக்கும் கோபம்

**ஜீ. கே. சுந்தரம்**
தலைவர், கம்பன் கழகம், கோவை.

கம்பனுடைய காப்பியத்தில் அவதார புருஷனுக வரும் இராம பிரானை நாம் சாந்த ஸ்வரூபியாகவே பார்க்கிறோம். இராம காதையே, "ஒரு அப்பழுக்கற்ற ஒருவன் இருக்கிறனு?" என்ற வினவிற்கு அளித்த விடையாகும். அப்பேர்ப்பட்ட லட்சிய புருஷனிடம் நாம் எந்தக் குற்றத்தையும் காணமுடியாது. ஆனல் மானிடனுகப் பிறந்தால் எல்லா மனித உணர்ச்சிகளும் இருந்தால் தான் மானிடனுக ஆவான். துக்கமும், சந்தோஷமும், கோபமும், சாந்தமும் மாறி மாறி வருவதே மனிதனுக் குண்டான இயல்பு. அதிலும் கோபம் வராத மனிதனே இருக்க முடியாது. மஹாத்மா காந்தி எப்படியோ? மிக உயர்ந்த தவ வலிமை பெற்றவர்களும், ஞானிகளும், கோபத் திற்கு ஆளாகி இருக்கிறர்கள். எந்த இடத்தில் செல்வம், பலம், தவம், கல்வி, கலை, ஞானம், பேராண்மை, ஆண்மை அதிகாரம் இவைகள் குவிந்து இருக்கின்றனவோ அங்கு கோபமும் அதற்குத் தக்கவாறு அதிகமாகவே இருக்கும். சினத்தின் கொடுமையை,

"தன்னைத்தான் காக்கின் சினம் காக்க காவாக்கால்
தன்னையே கொல்லும் சினம்"

என்று பாடி இருக்கிறர் வள்ளுவர்.

இராமனுக்கு, இளமையிலும் தாடகை வதத்திலிருந்து சீதா கல்யாணம் முடிந்து தனக்கு முடி சூட்டு விழா நடக்க இருக்கிறது என்ற நிலை வரையிலும் கோபம் வந்ததாகக் கம்பன் சொல்லவில்லை. ஆழி சூழ் உலகமெல்லாம் பரதனே ஆள நீ போய் தாழிரும் சடைகள் தாங்கி கானகம் சென்று தவமேற் கொண்டு ஏழ் இரண்டு ஆண்டினில் வா என்று கைகேயி சொன்ன பொழுதும் கோபம் வரவில்லை. ஆனல் அவன் முகம் அப்பொழுது மலர்ந்த செந்தாமரையை வென்றது. தம்பி லக்ஷமணனுக்கோ அடங்காத கோபம் வந்து விட்டது. "இராமனுக்கு முடி சூட்டுவதை யார் தடுத்தாலும் கொன்று விடுவேன்" என்று துடித்தான். இராவணன் சீதையை எடுத்துச் சென்ற பிற்பாடு கொஞ்சம் கலங்குகிறன். இராமன் கிஷ்கிந்தையை அடைந்து, வாலிவதைக்குப் பிறகு சுக்ரீவன் மாரிக்காலம் முடிந்ததும் வருவான் என்று காத்திருந்து விட்டு வாரா மையைக் கண்டு சிறிது கோபம் அடைகிறன். நன்றி மறந்தான் என்ற கோபம்; தம்பி லக்ஷ்மணனை அனுப்பி வாலியைக் கொன்ற மராமரத்தைத்துளைத்த அம்பை ஞாபகப் படுத்தச் சொல்கிறன். சுக்ரீவன் இராமனுடைய வலிமையைச் சந்தேகித்தான், ஆரம்பத்திலே-பிறகு இராம பாணத்தின் வலிமையை உணர்ந்திருந்தான். அதைக் குறித்துச் சொன்னல் தான் பயம் உண்டாகும் என்று கொண்டு தான் கோபமாகச் சொன்னலும், தம்பியை, கோபத்தில் அவனைக் கொன்று விடாதே என்று சொன்னன்.

"வெம்புகண்டகர் விண் புக வேர்அறுத்து
இம்பர் நல் அறம் செய்ய எடுத்த விற்
கொம்பும் உண்டு; அருங்கூற்றும் உண்டு; உங்கள்
அம்பும் உண்டு" என்று சொல்லு, நம் ஆணையே"

இதற்கு அடுத்து இலங்கையை அடைவதற்குச் சமுத்திரம் தடையாக இருக்கிறது. சமுத்திர ராஜனை உதவிக்கு அழைக்கிறான். அவன் வராததைக் கண்டு கோபம் அடைகிறான்.

''ஊற்றம் மீக் கொண்ட வேலையான் ''உண்டு'', ''இலை'', என்னும்
மாற்றம் ஈக்கவும் பெற்றிலம், யாம்' எனும் மனத்தால்
ஏற்றம் மீக்கொண்ட புனலிடை எரிமுளைத் தென்னச்
சீற்றம் மீக்கொண்டு சிவந்தன, தாமரைச் செங்கண்''

இந்தக் கடுங்கோபத்தோடு, திரிகின்ற, நிற்கின்ற யாவற்றையும் அழிக்கக் கூடிய கொடிய சுடு சரத்தை எய்தான். சமுத்திர ராஜனும் வந்து சேது கட்டுவதற்கு உதவுகிறான். இன்னும் ஓரிடத்தில் கோபக் குறியைக் காண்கிறோம். இராவணனுடைய ஒற்றர்கள் வானர வேடம் கொண்டு வானர சைன்யத்தோடு கலந்து உளவு பார்க்கிறார்கள். விபீஷணன் அவர்களை அறிந்து கொண்டு, பிடித்து கை கால்களைக் கட்டி இராமபிரான் முன் நிறுத்தி அவர்களைக் கொன்று விட வேண்டும் என்கிறான்.

ஆனால் இராமபிரான் அவர்களுக்கு உயிர்ப்பிச்சை தந்து திரும்பிச் செல்லும் படியும் செய்து இராவணனுக்கு இன்னது சொல்ல வேண்டும் என்பதையும் கூறுகிறான்; அந்தச் சொல்லில், ஒற்றர்கள் பால் கருணை பிறந்தது. தேவி தனிச் சிறையிலே இருக்கும் ஏக்கம் தோன்றியது. வஞ்சனை செய்து மனைவியை எடுத்துச் சென்றவன் பால் கோபம் உண்டாயிற்று. எதிரியின் தவம், பலம், செல்வச் செருக்கு, வாழ்வு எல்லாவற்றையும் தான் அறிந்திருப்பதை உணர்த்தினான். தான் செய்யப் போகும் முடிவைச் சந்தேகம் இல்லாமல் இராவணனுக்குச் சொல்லும் படியாக கட்டளையிட்டான்.

''தாழ்வு இலாத் தவத்து ஓர் தையல் தனித்து ஒரு சிறையிற்று ஆக
சூழ்வு இலா வஞ்சம் சூழ்ந்த தன்னைத் தன் சுற்றத்தோடும்
வாழ்வு எலாம் தம்பி கொள்ள வயங்கு எரி நரகம் என்னும்
வீழ்வு இலாச் சிறையின் வைப்பேன்'' என்பதும் விளம்பு வீரால்''

மீண்டும் வர முடியாத நரகம் என்னும் சிறையில் வைப்பேன் என்று போய் சொல்லுங்கள் என உரைத்தான்.

மேலே கண்ட நிகழ்ச்சிகளை எல்லாம் பார்க்கும் போது வாலி இராமனிடம் கேட்ட கேள்விகள் தான் நினைவில் தோன்றுகிறது. ''தேவியைப் பிரிந்ததினால் தான் மதியை இழந்தனையோ'' என்று ஐயப்பட்டான். தேவியைப் பிரிந்த பிற்பாடுதான் இராமன் கோபம் அடைந்ததைப் பார்க்கிறோம். தேவியைத் தேடுவதற்கும் தேவி இருக்கும் இலங்கையை அடைவதற்கும், வஞ்சனையால் தேவியைச் சிறையில் அடைத்தவனை எண்ணும் போதுமே தன் நிலையை இராமன் இழக்கிறான் என்பதை நாம் காண்கிறோம். இது, அவதாரம் எடுத்து மனிதராகப் பிறந்தவர்கள் துணைவி இல்லாத காலத்தில் நெறி தவறுவார்கள் என்ற உண்மையையே விளக்குகிறது. நம் முன்னோர்கள் நமக்குச் சொல்வது எந்த நல்ல காரியம் செய்தாலும் தம்பதி சமேதராகச் செய்ய வேண்டும். ஆண்டவன் தரிசனம், ஆசாரிய தரிசனம், பெரியோர்கள் தரிசனம், நல்லோர் ஆசி, சுற்றத்தார் ஆசி, மக்கள் ஆசி, அரசன் ஆசி, அதிதி களுக்குச் செய்யும் உபசரணைகள், அன்னதானம், மற்ற தானங்கள் செய்தல் ஆகிய இப்பேர்ப் பட்ட இன்னும் பல சுப காரியங்களை எல்லாம் தம்பதிகளாக இருந்தே செய்ய வேண்டும். மன நிம்மதியுடன் மனக் குறைவில்லாமல் – முறைப்படி, குற்றம் குறை வின்றிச் செய்வார்கள் என்பதை அன்றாட வாழ்க்கை முறையிலே அமைத்து அதையே நியமனம் என்று சொல்லி இருக்கிறார்கள். அந்தமரபு வழியே நாமும் அறிந்தும் அறியாமலும் நல்லறங்களைச் செய்து கொண்டு வருகிறோம். □

# நம்மாழ்வாரும் கவிச்சக்கரவர்த்தியும்

கம்பராமன்

கவிச்சக்கரவர்த்தி கம்பன் நம்மாழ்வாரின் திருவருளை நிரம்பப்பெற்றவன். கம்பனுடைய ஞானம் நம்மாழ்வாரிடமிருந்தே தோன்றியிருக்கிறது. திருமாலுக்குத் தக்க கவிஞன் நம்மாழ்வார்; நம்மாழ்வாருக்கு தக்க கவிஞன் கம்பன் என்று ஒரு கவிஞர் கருதுகிறார். கம்பனையும் திருவாய் மொழியையும் பயின்ற பிறகு அக்கவிஞர் அதனைக் கூறியுள்ளார்.

"தேவிற் சிறந்த திருமாற்குத் தக்க தெய்வக்கவிஞன்
பாவிற் சிறந்த திருவாய்மொழி பகர் பண்டிதனே;
நாவிற் சிறந்தவம் மாறற்குத் தக்க நன்னுவலவன்
பூவிற் சிறந்த வாழ்வான் கம்பநாட்டுப் புலமையனே"

திருவாய் மொழியைப் படிக்கும் பொழுது அங்கே கம்பன் திருமுகம் தெரிகிறது. கம்பனைப் படிக்கும் பொழுது அங்கே நம்மாழ்வாரின் முகம் தெரிகிறது. கம்பனுடைய காவியம் இருவர் நடையைப் பின்பற்றுகிறது. யாப்பு, சொற்கட்டு, எதுகை, மோனை முதலானவை திருமங்கை ஆழ்வாரைப் பின்பற்றி நடக்கிறது. தத்துவம், ஞானம், வேத உணர்ச்சி, உபநிடதபக்தி முதலானவை நம்மாழ்வாரைப் பின்பற்றி நடக்கிறது. கம்பன் காவியத்தில் இடையிடையே வருகிற தோத்திரப் பாடல்கள் யாவும் கருத்தாழம் உடையனவாய் ஞானமும் பக்தியும் உடையனவாய் விளங்குவதற்குத் திருவாய் மொழியே மூலவித்தாய் உள்ளது. கம்பன் நம்மாழ்வாரிடம் கொண்ட பற்றை ஒரு பாடலில் குறிப்பாகக் காட்டினன். அதனைத் தமிழ் உலகம் மறந்து விட்டது.

நம்மாழ்வார் 'பொலிக! பொலிக!' என்ற பாசுரத்தில் 'கலியும் கெடும்' என்று சாபம் கொடுத்தார். அச் சாபத்தால் கலியுகம், கிருதயுகமாக மாறிற்று. இதனைத் திருவுள்ளம் கொண்ட கம்பன்,

"தீபமே அனைய ஞானத் திருமறை முனிவன் செப்பும்
சாபமே ஒத்தது அம்பு; - தருமமே வலியது அம்மா!" என்றார்

இப்பாடலில் திருமறை என்றது திருவாய்மொழியை. 'மறை' எனினும் 'வாய்மொழி' எனினும் ஒன்றே. முனிவன் என்றது நம்மாழ்வாரை. 'தீபமே' என்ற அடைமொழி நமக்கு இப்பொருளைச் சுரக்கச் செய்கிறது. "சுடர் இரண்டே, பண்டு; மூன்றாயின" என்னும் சடகோபர் அந்தாதியை இங்கு நோக்க வேண்டும். நம்மாழ்வார் மதுர கவிக்கு நட்சத்திர வடிவத்தோடு தம்மை உணர்த்திய வரலாற்றை இங்கு ஒப்பிட்டு நோக்க வேண்டும். பின்னோர் இடத்தில் (பால காண்டம்-உலாவியற்படலம்) 'வீதிவாய்' என்று தொடங்கும் பாடலில் நம்மாழ்வாரை 'யாதினும் உயர்ந்தோர்' என்று கூறியுள்ளார். பின்னர் இதனை விளக்கலாம்.

நம்மாழ்வாருடைய பாசுரங்கள் முழுமையும் கம்பன் இதயத்தில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன. திருமால் இராமனை அவதரித்தாற் போல இப்பாசுரங்களும் கம்பன் நாவில் மறுபிறப்பைப் பெற்றுச் சிறப்புறுகின்றன.

கம்பனுடைய கடவுள் வாழ்த்துப் பாசுரம் ஆழ்ந்த கருத்துடையது. எல்லாப் பொருளுக்கும் மூலவித்தான பரம்பொருளை இப்பாடல் போற்றுகிறது. இப்பாசுரத் திற்கு மூலம் இராமாநுஜருடைய ப்ரம்ம சூத்திரத்தின் மங்கள ஸ்லோகம் என்று பேராசிரியர் மு. இராகவையங்கார் அவர்கள் திருவுள்ளம் பற்றுகிறார்கள். இராமாநுஜர் கம்பனுக்குப் பின்னே பிறந்தவர் என்ற உண்மை அன்று வெளிப் படாமையால் இங்ஙனம் எழுத நேர்ந்தது. இராமாநுஜரே கம்பனின் வாக்கைப் பின்பற்றியுள்ளார்.

நம்மாழ்வாரின்

''ஊழி முதல்வன் ஒருவனே' என்னும் ஒருவன், உலகு எல்லாம்
ஊழிதோறும் தன்னுள்ளே படைத்து, காத்து, கெடுத்து, உழலும்
ஆழிவண்ணன், என் அம்மான் அம்தண் திருமாலிருஞ்சோலை
வாழி, மனமே! கைவிடேல்; உடலும் உயிரும் மங்க ஒட்டே!''

இப்பாவையும் கம்பன் பாடலையும் நினைத்து நோக்கின் உண்மை புலனும். நம்மாழ்வார் 'உழலும்' என்றார். அதற்கு உரை எழுதிய சான்றோர் 'விளையாட்டாகத் திரிகின்ற' என்றார். அதனைக் கம்பன் 'விளையாட்டுடையார்' என்றான். 'கெடுத்து' என்ற சொல் கம்மன் நாவலில் 'நீக்கி' என்று மறுமலர்ச்சி பெற்றிருக்கிறது. இங்கு ஈட்டு உரை ஆசிரியர் நயம்பட விளக்கம் செய்கிறார்.

நம்மாழ்வார்,

''கண்ட ஆற்றால் தனதே உலகு என நின்றான்-தன்னை
வண் தமிழ் நூற்க நோற்றேன்–அடியார்க்கு இன்ப மாரியே!''

என்று பாடினார். இப்பாசுரத்தில் ஆழ்வார் தன்னுடைய நூலை 'வண்டமிழ்' என்கிறார். நூல் ஆகையினால் நூற்க நோற்றேன் என்றார்.

'பஞ்சிதன் சொல்லா' என்று தொடங்கும் நன்னூல் ஈண்டு நோக்கத்தக்கது. இவற்றையெல்லாம் நோக்கிய நம் கவிச்சக்கரவர்த்தி கம்பன் அடக்கத்துடனும் ஆர்வத்துடனும்.

நொய்தின் நொய்ய சொல் நூற்கலுற்றேன் – எனை
வைத வைவின் மராமரம் ஏழ்துளை
எய்த எய்தவற்கு எய்திய மாக்கதை
செய்த செய்தவன் சொல்நின்ற தேயத்தே;

வைணவச் சான்றோர்கள் ஞானத்தில் தன் பேச்சுப் பிரேமத்தில் 'பெண் பேச்சு' என்பார்கள். பிரேமத்தில் ஆழ்வார்கள் துறைப் பாடல்கள் பாடுவார்கள். அங்கு ஆழ்வார்கள் நாயகியாக மாறுவார்கள். ஆழ்வார்களின் நாயகி பாவத்தில் கல்லும் கரையும். அவர்களுடைய பாவத்தை (மெய்ப் பாட்டை) சீதாபிராட்டியினிடத் தில் ஏற்றிக் கூறுகிறான் கம்பன்.

'' அயர்க்கும்; சுற்றும் பற்றிநோக்கி அகலவே நீள்நோக்குக் கொள்ளும்
வியர்க்கும்; மழைக்கண் துளும்ப வெவ்வுயிர் கொள்ளும்; மெய்சோரும்
பெயர்த்தும் கண்ணா! என்று பேசும் பெருமானே வா! என்று கூவும்
மயல்பெருங் காதல் என்பேதைக்கு என்செய்கேன் வல்வினையேனே?''

நம்மாழ்வாரின் இப்பாசுரமே காட்சிப் படலத்தில் பிராட்டியின் நிலையாக வந்துள்ளது. இரண்டையும் ஒப்பிட்டுப் பார்ப்பது அறிஞர் கடமை.

கம்பன் இராமபிரானுடைய நீல வண்ணத்தில் மிக்க ஈடுபாடு உடையவன். பெருமான் நீலநிறமுடையவனாய் இருந்தாலும் அவன் திருமேனியில் பேரொளி எப்போதும் கதிர் வீசிக் கொண்டிருக்கும் என்பார் நம்மாழ்வார்.

**"செந்தண் கமலக்கண், கை, கால், சிவந்தவாய், ஓர்கரு ஞாயிறு**
**அந்தம் இல்லாக் கதிர்பரப்பி அலர்ந்தது ஒக்கும் அம்மானே"**

இப்பாசுரம் கம்பன் இதயத்தில் பேருணர்வை எழுப்பி இருக்கிறது. இதனால்தான்,

**"வெய்யோ னொளி தன்மேனியின் விரிசோதியில் மறையப்**
**பொய்யோ எனும் இடையாளொடும் இளையானொடும் போனான்"**

என்றும்,

**"கருஞாயிறு போல்பவர் காலொடுபோய் வருநாள்அயலே வருவாய்"**

என்றும் பாட முடிந்தது.

சாந்தோக்கிய உபநிஷத்தில் அக்ஷிவித்தைத் சிறப்புறப் பேசப்பட்டுள்ளது. அவ்வித்தையின் நுண்பொருள் காண்பது மிகவும் கடினம். இந்திரனும், விரோசனனும் அவ்வித்தையின் நுண்பொருள் அறிந்திலர். "கண்ணில் காணும் புருஷன் எவனோ அவனே ஆத்மா. அவ்வாத்மா சாவற்றது; பயமற்றது. அதுவே பிரமம்." இதுதான் அக்ஷிவித்தை.

நம்மாழ்வார் இதன் நுண்பொருளை உணர்ந்து 'கண் ஆவான் மண்ணோர் விண்ணோர்க்கு' என்று பாசுரம் இடுகிறார். மேலும் அவர் 'கண்ணன் என் கண்ணில் உள்ளானே' என்றும், கமலக்கண்ணன் என் கண்ணில் உள்ளான், காண்பன் அவன் கண்களாலே' என்றும் விவரிக்கிறார். இங்கு நம்மாழ்வார் அக்ஷி வித்தையை யோகமாக மாற்றியிருக்கிறார். சாந்தோக்கியத்தையும், திருவாய்மொழியையும் நன்கு தெரிந்த கவிச்சக்கரவர்த்தி மேலும் மேலும் அதனை அழகுபடுத்திக் கவிதை புனைகிறார்.

குகன் இராமபிரானைச் சந்திக்கின்றான்; காண்கிறான். மனம் கரைகிறான். இங்கு கவிச்சக்கரவர்த்தி

**கண்ணனைக் கண்ணில் நோக்கிக் கனிந்தனன்'** என்று கூறுகிறான்

'காண்பன் அவன் கண்களாலே' என்ற பாடல் இங்கு பிரதிபலிக்கிறது.

இராமபிரான் மிதிலையில் உலாக்கொள்கிறான். அவனை ஆன்மாக்களின் சாயலாக இருக்கின்ற மாதர்கள் காண்கின்றனர் காண்பவர் விழிகளின் வழியாகப் பெருமான் இதயத்திற்குள் புகுகிறான்–கண்ணன் என்ற பெயர் இங்கே பொருளுடையதாகிறது. இதனைக் கவிச்சக்கரவர்த்தி நயம்படப்பாடுகிறான்.

**வீதிவாய்ச் செல்கின்றான் போல் விழித்து இமையாது நின்ற**
**மாதரார் கண்களூடே வாவும் மான் தேரில் செல்வான்**
**யாதினும் உயர்ந்தோர் தன்னை யாவர்க்கும் கண்ணன் என்றே**
**ஓதிய பெயர்க்குத் தானே உறுபொருள் உணர்த்தி விட்டான்**

இப்பாடலில் திருவாய்மொழியின் பல பாசுரங்கள் ஒன்றாகத் திரண்டுள்ளன. கண்ணன் என்பது பொதுவாக ஆயர்குலச் சிங்கத்தையே குறிக்கும். கம்பன் இப்பெயரைத் திருமாலுக்கும் திருமாலின் அவதாரமான இராமனுக்கும் ஆக்கியுள்ளான்.

சூர்ப்பணகை சீதையைக் காண்கின்ற இடத்தில் திருவாய்மொழிப் பாசுரம் ஒன்று காட்சி தருகிறது. சூர்ப்பணகை சீதையைக்கண்டாள் "அச்சீதை இராமன் பக்கத்தில் இருக்கிருள். அவ்விராமன் தேவர், நாகர், விரிஞ்சன் முதலானவர்களின் கண்ணின் கண் விளங்குகின்ற ஒளியானவன். இதனைக் கம்பன்'

விண்ணிடை இம்பர் நாகர் விரிஞ்சனே முதலோர்க்கு எல்லாம்
கண்ணிடை ஒளியின் பாங்கர் கடிகமழ் சாலை நின்றும்
பெண்ணிடை அரசி தேவர் பெற்ற நல்வரத்தால், பின்னர்
மண்ணிடை மணியின் வந்த வஞ்சியே போல்வாள் வந்தாள்"

என்று பாடுகிருன்.

இப்பகுதிக்கு மூலம்

" கண்ணுவான் என்றும் மண்ணோர் விண்ணோர்கு "

என்ற திருவாய் மொழிப் பாசுரமே.

தலைவனும் தலைவியும் சந்திக்கின்றனர். இருவர் இதயமும் ஒன்று படுகிறது. தலைவன், தன்னுள்ளம் தலைவியின்பால் சென்றது, என்றும் தலைவி தன்னுள்ளம் தலைவன்பால் சென்றது என்றும் கூறுவது இலக்கியமரபு. இம்மரபைத் திறம்படக் கையாண்டவர் நம்மாழ்வாரே.

'வெள்ளைச் சுரிசங்கு' என்று தொடங்குகிற பதிகம் இக்காதல் உணர்வை நன்கு படம் பிடித்துக் காட்டுகிறது.

நானக் கருங்குழல் தோழி மீர்காள் அன்னையர்காள்! அயல்சேரியீர்காள்!
நான்இத்தனி நெஞ்சம் காக்கமாட்டேன் என்வசம் அன்றுஇது இராப் பகல் போய்
தேன் மொய்த்த பூம்பொழில் தண்பணை சூழ் தென்திருப் பேரெயில் வீற்றிருந்த
வானப் பிரான் மணிவண்ணன் கண்ணன் செங்கனி வாயின் திறத்ததுவே "

இப்பாடலை நன்கு பயின்றபின் கம்பன் பிராட்டியின் மன நிலையை விவரிக்கிருன். 'கரிய சூரியனைப் போன்ற இராமனைப்பின்பற்றிச் சென்ற மனமே நீ விரைவில் திரும்பி வருக', என்னுடன் பலவருடங்கள் தொடர்பு கொண்ட நீ சிறிது நேரமே கண்ட பெருமானைப் பின்பற்றிப்போய் என்னை மறந்து விட்டாயே' என்று சொல்கிருள்.

கருநாயிறு போல்பவர் காலொடு போய்
வருநாள் அயலே வருவாய்; - மனனே!
பெருநாள், உடனே பிரியாது உழல்வாய்;
ஒருநாள் தரியாது ஒழிவார் உளரோ?

இராமனைக் கண்டு அவன்பால் அன்பு கொண்ட தலைவி தோழியை நோக்கிப் பின் வருமாறு கூறுகிருள்.

"தோழியே! என் கருத்து அண்ணலைப் பின்பற்றிச்சென்றது இன்னும் வர வில்லை; நீ அங்கு அதனைக் கண்டதுண்டா?" என்று கேட்கிருள்.

பெருத்த காதலின் பேதுறு மாதரின்
ஒருத்தி மற்று அங்கு ஒருத்தியை நோக்கி, 'என்
கருத்தும் அவ் வழிக் கண்டது உண்டோ?' என்ருள்
அருத்தி உற்றபின் நாணம் உண்டாகுமோ?

இப்பாடல் சடகோபரின்

''அன்னம் செல்வீரும் வண்டானம் செல்வீரும் தொழுது இரந்தேன்;
முன்னம் செல்வீர்கள் மறவேல்மினோ; கண்ணன் வைகுந்தனோடு
என் நெஞ்சினரைக் கண்டால் என்னைச்சொல்லி அவரிடைநீர்
இன்னம் செல்லீரோ! இதுவோ தகவு! என்று இசைமின்களே''

என்று பாடினர்.

இப்பாசுரம் கவிச்சக்கரவர்த்தியின் காவியத்தில் பல இடங்களில் பேருணர்வுப் பாக்களாக வந்துள்ளது.

பரிமேலழகர் ''வீடு சிந்தையும் மொழியும் செல்லா நிலைமைத்தாகலின் அதனை மொழியால் விளக்குவது கடினம்'' என்ருர். நாச்சினர்க்கினியர் 'வீட்டின் தன்மையைத் தமிழால் கூருர்' என்ருர். ஆனல் நம்மாழ்வார் ஒரு பாசுரத்தில் வீட்டின் இயல்பைத் தமிழில் குறியீடுகளால் விளக்கியுள்ளார்.

குறுகா, நீளா, இறுதிகூடா, எனை ஊழி
சிறுகா, பெருகா, அளவுஇல் இன்பம் சேர்ந்தாலும்
மறுகால் இன்றி மாயோன் உனக்கே ஆளாகும்
சிறு காலத்தை உறுமோ – அந்தோ! தெரியிலே?

இப்பாடலுக்கு விளக்க உரை தந்தவர்கள் இதில் கைவல்யம் பேசப்படுகிறது என்கிருர்கள். கம்பன் அங்ஙனம் கருதவில்லை. கவிச்சக்கரவர்த்தி இப்பாடலுக்கு விளக்க உரையாக ஒரு கவிதை புனைகிருன். சரபங்க முனிவன் இராமபிரானை நோக்கி 'நான் அற்பப் போகங்களையும், கைவல்யத்தையும் விரும்பவில்லை. மீளாத நெறியையே அடைய விரும்புகிறேன்.' என்று கூறுகிருன். அங்கு சரபங்கன் நாவில் நம்மாழ்வாரே இருந்து

சிறுகாலை இலா, நிலையோ திரியா
குறுகா, நெடுகா, குணம் வேறுபடா
உறுகால் கிளர் பூதம் எலாம் உகினும்
மறுகா, நெறி எய்துவென்; வான் உடையாய்!

என்று பேசுகிருர்.

கம்பன், நம்மாழ்வாரின் திருவாய் மொழியில் மிகவும் ஈடுபட்டதால் அவனுக்கு இராமபக்தி உண்டாயிற்று. ''கற்பார் இராமபிரானை அல்லால் மற்றும் கற்பாரோ?'' என்ற அமுத வாசகமே கம்பனை உயர்வற உயர் நலம் உடையவனுக்கிற்று உண்ணும் சோறும் பருகும் நீரும் எல்லாம் இராமனே என்கின்ற அதிசய உணர்வு கம்பன் இதயத்தை நிரப்பிற்று. கம்பனுடைய சமய நோக்கத்திற்கு மூலவித்திட்டவர் நம்மாழ்வாரே. சமயத்தைப்பற்றியும் அத்துவிதம் பற்றியும் தத்துவங்கள் பற்றியும் கம்பன் நம்மாழ்வாரைப் பின்பற்றிய திறத்தை விரிப்பின் பெருகும். அவற்றைத் தனி நூலாக ஆராய வேண்டும்.

● ○ ●